# TEXT BOOK

FOR

THE VTH FORM OR THE PRE-MATRICULATE CLASS.

NANNERIYIRCIRANTA

நன்னெறியிற்சிறந்த

YOCEPPIN CARITAI.

# யோசேப்பின் சரிதை.

திண்டுக்கல் தமிழ்ப்பண்டிதன்

அ. ஜீவாநந்தம்

இயற்றியது.

பருப்பித்துப் புதிப்பித்த பதிப்பு.

விலை அணா 8:—தற்சுதந்தரம்.

# THE STORY OF JOSEPH

## EMINENT FOR RARE QUALITIES.


**BY A. JIVANANDAM**

TAMIL PANDIT, DINDIGUL


ENLARGED AND REVISED.

PRICE 8 ANNAS:—*Copy Right Reserved.*

Approved as a Text Book for use in the Vth Form by the Honorable Mr. DAVID DUNCAN M. A. D. SC., Director of Public Instruction, under date the 2nd November 1895.


TRICHINOPOLY.

"Printed at the SOUTHERN STAR PRESS"

1896.



To

THE RIGHT

REVEREND FREDERICK GELL D. D.

**THE LORD BISHOP OF MADRAS,**

this little poetical work is, by kind permission,
most respectfully dedicated by his
obedient and humble servant,

**THE AUTHOR.**

# Introduction.

This is a poetical work on the life of Joseph, the son of Jacob, who was famous for chastity and other rare qualities. It occupied the author one full year to compose and was printed in 1883. It was composed on the basis of Harichandra Purana, the hero of which was famous for veracity and other good qualities. The 2,000 copies then printed were well appreciated and purchased by the Hindu, Mohamedan as well as the Christian Public. Encouraged by this, the author has now revised and enlarged it, with a little addition in the body of the work, with a glossary of the difficult terms, a succinct chapter of Prosody and an Index of the 23 metres used in the book.

As trusted by the giver of the English Testimonial No. 1, the time has arrived for the work to be recognised as a standard one, the Director of Public Instruction having already sanctioned its use in the Vth Form.

It is free from extravagant imageries of an amorous complexion, as observed in the English Testimony No. 2, and hence, not liable to stain the minds of the young students. It is, further, fit for introduction in schools as a work in which students can obtain a knowledge of Poetical constructions as well as morality, as observed in the Tamil Testimonials Nos. 4, 5, 7, 8, 10 and 11, the givers of which are regular Poets or Head Pandits of High Schools and 1st grade colleges and have gone into the work.

In the book there are some instructive and illustrative digressions, such as the father's lamentation on the false report of the brothers that their brother was devoured by some wild beast of the jungle; the six sins implied in the brothers' treacherous act; the probable conversation of the brothers on the way when they went to canaan to bring their father to Egypt; lamentation over Jacob's death; and lamentation over Joseph's death.

J. DAYAHARAM PILLAI,

*The Author's Student.*

# TESTIMONIES.

1

I have read portions of Mr. A. Jivanandam Pillai's Poetical version of the History of Joseph, and am much pleased with it. The style is just what it should be-neither too high nor too easy. The author's abilities in the manner he has treated a most interesting portion of Bible History appear to be of no mean order. By this work, he reflects, I believe, much honor upon the old American Mission Seminary in Jaffna, of which he is one of the sons. I trust that, in time, it may take it's place among standard works in Tamil Christian Literature.

Madras,
*1st July* 1883.

C. T. HENSMAN TAMBU PILLAI, B.A.
*Acting Supt. of Vernacular studies,*
*Madras Normal School.*

2

I have read the History of Joseph, written in verse by Mr. A. Jivanandum, Tamil Pandit. As able men have pronounced highly of the merits of the brochure as to its style and substance, I refrain from saying more on the same. One noteworthy feature of the work is the studied absence of episodes, allusions and extravagant imageries of an amorous complexion, which mar the otherwise excellent productions of certain Poets and which, in their effect, corrupt young minds.

D. SAMUEL,
*Manager and Head Master,*
*Anglo-Vernacular School,*
*Chintadripett.*

Madras,
30*th July* 1883.

A CURSORY perusal of this little book leads me to think that it is well got up and contains a large amount of information. It is good in idea and plan, and gives evidence of careful and honest work. The author's endeavour to make the style peculiarly engaging and interesting is apparent on every page.

MADRAS,
*31st June* 1883.

D. J. WINFRED, B.A.,
*Officiating Master,*
*Presidency College.*

---

I have seen Mr. A. Jivanandam Pillai's **Story OF Joseph** and can recommend the book to Managers of Schools.

L. C. WILLIAMS,
*Asst. Inspector of Schools,*
SIXTH DIVISION.

*February* 1st
1896.

# சார்த்துக்கவிகள்.

---

## 4

தஞ்சை ஊத்தரான திருச்சபைப் பிரசங்கியார்

ஞா. தேவசகாயம்பிள்ளை

அவர்கள் இயற்றியது.

---

எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

அமுதமெனத் தேறலெனப் பாகு சீனி யாமென்ன நால்வகைச்சொ லழகா
ய்த் தேடித்
தமிழிலுயர் யோசேப்பின் மரபின் மேன்மைச் சரித்திரத்தை விருத்தப்பா
வாயியற்றி
இமிழ்திரைசூழ் ஞாலமிசைக் கல்விச் சாலை யின்சிறுர் டயிலும்வண மீதல்
செய்தான்
கமையினரு ளானந்தன் றவத்து தித்த கற்பிதச்சீ வானந்தக் கவிவலோனே.

## 5

மதுரைத் திருப்பூவணம்

யாக்கோபுபாக்கியநாதக்

கவிஞன் சொல்லியது.

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சீர்பூத்த மாவளஞ் சூழ்தஞ்சை நகரினன் தேசிகனரு ளானந்தமுன்—செய்
தவப் பேற்றினுன் மகவெனவு தித்தநற் சீர்த்தியான் மேதாவியன்
பேர்பூத்த ஜீவா நந்தநன் னுவலன் பிறங்குகலை பலதெளிந்தோன்—பிரபல
னியோசேப்புச் சரிதையினை நிருடையிற் பெட்புட னெவரு மறிய
வார்பூத்த நல்விருத் தப்பாவி னத்தானே வண்பொரு ளயஞ்சொன்னய—
மாய்க்கன்ன லிரதமெனச் செந்தமிழ்ப் பாவினுல் அறைந்துமே கலை
சாலையிற்
பார்பூத்த சிறுர்க்குமூஉச் சீரெய்த வும்மொரு படிப்பா யிதைத்தந்தனன்—
பதிமதுரை நகர்புகழுர் திருப்பூ வணக்கவிஞன் பாக்யநா தன்மெச்சவே,

௬

சுவிசேஷ சித்தாந்த தேசிகர்,

இ. சாமுவேல்பிள்ளை அவர்கள்

புனைந்துரை அகவல்.

பொதிகைப் புதுநறும் பொன்னந் தமிழினும்
அதிசய மற்புதம் அமிர்த நாமம் அப்
பொன்னே புனைந்த பொன்முடிக் கென்னை
மன்னே வலிய வலித்தினி தாண்டருள்
விண்முடித் துறக்கம் வேண்டா துயிர்கூர்
முண்முடி புனைந்த மூவா முதல்வன்
தன்னடித் தாமரை தன்னடைக் கலமே
தந்தவுன் மலர்ப்பதந் தாழ்ந்து பராவும்
அமிழ்தினு மான்ற இமிழ்சுவை யதுவாக்
கமழ்பரி மளத்துங் கந்தத் தென்மலைச்
சந்தப் பொருப்பார் தமிழினு மாரியத்
தண்டமிழ் மணத்தினுந் தண்ணிய சுகந்தஞ்
சத்திய வேதத் தனிமுத லொருநூல்
பத்திசெய் பத்திமை பவமனு மக்கட்
கொழுக்க முயர்குல முயிர்க்குறு துணையென்
றிழுக்கந் தீர்ந்திட ரிவ்வுல கொழிய
மீட்பின வழிக்கு மேவிய கருவியாஞ்
சூழ்ச்சியீ தென்னுந் துணிபுமேற் கொண்டு
பசுபா சங்கடந் துயரிய பதியவன்
விசுவா சியர்கடந் தந்தையின் கான்முளை
மரபு விளங்கிய யோசேப் மாதவன்
மரபிய லைச்சிறு காப்பியம் வகுத்தனன்
தமிழ்மொழி புணர்வும் இசைத்தமிழ்ச் சுவையும்
அமையப் பெற்ற ஐரோப்பிய குரு
அமரிக்கன் மிசியோன் சபையா ராதனை
விமரிசைக் கீர்த்தனைத் தமிழ்ப்பண் விநோதன்
பற்பல பயன்படு நூதன வேற்பா
டுற்பவத் தோடு பரிட்சை யொழுங்கும்
திண்டுக் கல்லிற் றிருவா ராதனைக்
கெண்டகு தெய்வா லயங்கட் டெழிலும்

செய்த அநேகஞ் சிறப்புயர் ஸ்ரீமான்
உய்வழி ரட்சணைத் தோங்கிய விரதன்
மதுரை யாரியன் மாதவனெ டுவார்ட்
முதுபெயர் முன்பெறும் மூதியல் வெப்லையர்
ஆங்கி லேயக வைதிக நூலின்
பாங்குறு சுருக்கம் படுத்திய தமிழ்க்கு
முனுஷி யாங்குதவி யுதவி முனைந்தவன்
மனமுவந் தெவர்க்கும் வழங்கு மனத்தன்
நெல்லை யம்பதியி னெடுங்கலை நிதியான்
தொல்லை நிவாசத் தஞ்சையம் பதியான்
அருளா னந்த தேசிகன் அருள்வரம்
தெருள்விளங் கொளிர்செஞ் சிவா னந்தம்
என்று மியற் பெயரிறவாப் பெயரினன்
மன்னுந் தமிழ்முனி வரம்பெற் றெழுந்த
நிதியம் பனுவ னிலையத்
தாதியஞ் சரித்திரா னந்த தேசிகனே.

7

BY TANJORE S. P. G. HIGH SCHOOL HEAD PANDIT.

தஞ்சைமா நகரம் இராஜதானிப் புலவர்களுக்கெல்லாந் தலைமைப் புலவரும்
மேற்படி நகரத்து ஹைஸ்கூல் ஹெட் முனிஷியும் அநேக ஐரோப்
பிய துரைகளுக்கு முனிஷியும் இயற்றமி ழாசிரியரு மாகிய
மகா-௱-௱-ஸ்ரீ, மகாவித்துவான் மதுரமுத்துப்பிள்ளை,
அவர்களா லியற்றப்பட்ட

எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

தாழ்ந்தவ ருயர்வர் உயர்ந்தவர் தாழ்வர்
    எனுமறை மொழிக்குச் சாட்சிய தாய்ச்
சூழ்ந்துதன் றமயர் கொடுமையினி யற்றுந்
    தொகையிலா வினைகளைப் பொறுத்து
வீழ்ந்தவன் னவரை யெடுத்துமே னிறுத்தி
    வீரனுக் கற்பினுன் விளங்கி
வாழ்ந்திடு மீயோசேப் பிருஞ்சரித் திரத்தை
    வளம்பெறு மியற்றமி ழதனில் (க)

விருத்தப்பா வாகக் கல்வியஞ் சாலை
    மேவிய சிறாரிலக் கணத்தின்

பொருத்தமாய்ப் பதங்கள் புணரிய விலையும்
 யாப்பிலக் கணத்தினிற் புகன்ற
திருத்தமார் விதியிற் சங்கிரக மாகச்
 சிறுபான்மை வேண்டுவ சேர்த்துக்
கருத்தொடு பார்வை யிடுமவர்க் கெல்லாம்
 சந்தேகங் கலப்புரு வாகத் (உ)

தெரிதர, மிக்க விருப்பொடிச் சரிதம்
 செப்புரா வுக்கின்பஞ் சனிக்கப்
பிரியமாய்க் கேட்போர் செவிக்கின்பஞ் சனிக்கப்
 பெரிதுணர் மனக்கின்பஞ் சனிக்க
அரிதுண ரகக்க ணதற்கின்பஞ் சனிக்க
 ஆருயி ருக்கின்பஞ் சனிக்க
உரியமெய்க் குப்பூ ரிப்பின்பஞ் சனிக்க
 உயிர்ப்பினு சிக்கின்பஞ் சனிக்க (௩)

விதித்தனன், கல்விச் சாலையின் றலைவ
 ரகமே வியதுரை மார்கள்
மதித்துயர் மதுராஸ் பிரசிடென்சி முழுதும்
 வழங்குமா றியற்றிந லச்சிற்
பதித்தனன் றிண்டுக் கல்லில்வா ழருளா
 நந்ததே சிகன்வர பாலன்
நதிப்புன லனைய பொதுநல வுதார
 குணச்சீவா நந்தநா வலனே. (௪)

## 8

### Madura Poet.

மதுரைத் திருப்பூவணம்

ஈசாக்கு பாக்கியநாத தேசிகர்.

அறுசீர்க்கழி நெடி லடி ஆசிரியவிருத்தம்.

வானமிசை யமர்பரவு தேவனருண் மறையில்வரு மாண்பியோ சேப்பின்
மேனலமாஞ் சரிதமதைச் செந்தமிழின் விருத்தப்பா வாகச் செய்தான்
தேனெழுகு சோலைசூழ் திண்டுக்கல் தனில்வாழு மருளா நந்தன்
தானுதவு புத்திரன்சீ வானந்தப் புலவனென்னுந் தகைமை யோனே.

கட்டளைக் கலித்துறை.

அடுத்தனன் வேத முதனூல்பல் காவிய மாய்ந்து தெளிந்
தெடுத்தனன் மாண்புடை யோசேப்பின காதை யிளைஞருக்காய்த்
தொடுத்தனன் செந்தமிழ்ப் பாவின மாய்ப்பொருள சொன்னயமாய்க்
கொடுத்தன னற்சீவா நந்தக் கவிஞன் குவலயத்தே.

## 9

### By a Tanjore Poet.

தஞ்சை மகாவித்வான்
வேதநாயக சாஸ்திரியார் அவர்கள் புத்திரர்
எலியாதேவசிகாமணி சாஸ்திரியார் பாடியது.

வெண்பா.

சீர்உறை யோசேப்பின் திவ்யகற் பின்சரிதை
பார்நிறை மானிடர் பார்த்ததிச—நேர்நிறை
பத்தி யுறிவாழ்சப் பயந்தனன் பாவினத்தால்
வித்தசஜீ வானந்தனே. (1)

பஞ்சவனாட் டோங்கு பதிதிண்டுக் கல்லின்வாழ்
விஞ்சையரு ளானந்த வேதியன்—றஞ்சுதன்
ஜீவானந்தம் செய்தான் றீட்டுமறை யோசேப்பின்
ஜீவானந்தச் சரிதையை. (2)

மானிடவ தாரஇம் மானுவேல் நாதனுக்கு
மானவனி யோசேப்பு மாதிரியா—மோன
மதிகதித் தோங்கவழி குறித்தான் பாவுக்
கதிபன் ஜீவானந்தனே. (3)

## 10

### By The Tanjore S. P. G. College Hd. Pandit.

இஃது
திருவாவடுதுறை ஆதீனவித்துவான்
மகா-ா-ா-ஸ்ரீ, மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்கள் மாணாக்கருள்
ஒருவரும், தஞ்சை மிசியோன் காலேஜு தமிழ்த் தலைமைப்
பண்டிதருமாகிய
மு. ஐயாச்சுவாமிப்பிள்ளை
அவர்கள் இயற்றிய

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

சீர்மலிந் திடுமியோ சேப்பின் சென்மநற் சரிதந் தன்னை
யேர்மலி செய்யு ளாக வியற்றியிப் புவியோர்க் கீந்தான்
கார்மலி தஞ்சை வாழுங் கருணைகூ ரருளா னந்தன்
பேர்மலி மகவாத் தோன்றிப் பிறங்குநா வலவ னானே. (1)

கலிப்பா.

பொய்யுலக மோகப் புணரியு ளாழ்ந்தின்ப நலங்
கைபுகு தலின்றிக் கலங்குஞ் சிறார்மற்றோர்
மெய்புகுதும் வண்ணம் விளக்கினா னியோசேப்பின்
செய்ய நடபடிகள் ஜீவானந்தம்மகிழ்ந்தே. (2)

By the Madras Christian College Head Pandit.

கிறிஸ்தியன காலேஜ் பிரதம பண்டிதரால்.

நாவலர்கள் கொண்டாடுந் திண்டுக்க லெழிலார்வா ழருளா னந்தக்
காவலனாண் டவப்பயனாச் சனிக்க னலதரித்த ஜீவானந்தப்
பாவலனியோ சேப்பினுயர் சரிதமதைப் பாருலகோ ரெளிதி னோர்வான்
ஆவலுட னின்றமிழில் விருத்தப்பா வாகவமைத் துதவி னானால். (1)

நவிலரிய மகிமைசெறி யோசேப்பின் றிருச்சரித நயந்து நாளும்
புவியினுளா ரெளிதினுணர்ந் திடேற வின்றமிழாற் புனைந்தான மன்னோ
சவியுறுதண் ணொழுக்கநிறை யருளானந் தக்குரிசில் தவச்சேய் மேலாங்
கவிஞர்புகழ் ஜீவானந் தப்புனித னவன்பெருமை கழறற் பாற்றோ. (2)

சென்னை,
புரசைப்பாக்கம்.

திரு. சின்னசாமிப் பிள்ளை.
1894-௵ மார்ச்சு௴.

# தற்சிறப்புப்பாயிரம்.

# PREFACE BY THE AUTHOR.

## நேரிசை யாசிரியப்பா.

* 1 ஆதிநூலாகிய அருண்மறைவேதம்
ஓதியசரிதமெல் லாமொருங்கேயாய்
பாவுமைரோப்பிய பாடையிலிருப்பபோற்
காவியந்தமிழினிற் காணிலம் அதனான்
எக்கலைகளுமுணர் எவ்வெவருஞ்சொலா
அக்குறைதீர்க்க அகந்தனிற்கொண்டே
பழயன கழிதலும் புதியன புகுதலும்
வழுவலகால வகையினெறன்தனாற்
காண்டம்படலம் கற்பியேனாகி
மாண்டயோசேப்பின் வளமுறுசரித்திரம்
வேதத்துளததை விருத்தப்பாவா
ஓதித்தகுமா றுறுமிடம்வியார்த்தி
சேர்த்துச்செந்தமிழ் கற்குமாணாக்கர்
பார்த்திடகிறிஸ்துவின் பத்தர்படித்திடத்
தென்னவனெலையிற் றிண்டுக்கலில் வாழ்
தெருளோர்போற்றும் அருளானந்தமன்
பெற்றிடுஞ்சீவா னந்தமென்பெயரினன்
நற்றமிழறியேன் நசையொடும் புவிவாழ்
மாந்தரைப்புரக்க மன்னுடலெடுத்த
வேந்தனங்கிறீஸ்துவின் மகிமையைவிரும்பி
ஆயிரத்தெண்ணூற் றெண்பதின் மூன்றாம
ஆயனமமையும் ஆடிமாதத்தினே
மூவிரண்டெழிதா முன் னூறு
பாவள வாகப் பகர்ந்தனெனன்றே.

அ. ஜீவானந்தம்.

* The figures on the left margin against the first lines of Stanzas throughout the Text denote the corresponding Nos. of the Index of metres appended.

# யோசேப்பின் சரிதை.

## STORY OF JOSEPH.

### திரியேக கடவுள் வணக்கம்.

### Invocation to the Triune God.

2. எடுத்தாற் கரும முற்றும் எளிதினில் முடிய, அத்தால்
அடுத்தன தேவ மாண்பும் ஆருயிர்ப் பயனும் எய்தத்,
தொடுத்தநல் விருத்தப் பாவிற் சொற்பொருள் வண்மை சாரக்,
கடுத்தன தனக்கொன் றில்லாக் கர்த்தனைச் சிந்தை செய்வாம். (1)

சீர்மலி எபிரோ ஜாதி சிறந்தயோசேப்பின் காதை
ஏர்மலி தமிழினாலே இயலுற விளங்கப் பாடப்
பார்மலி மாக்கள் அஃதின் பயனறீஇ வாழ்க ஒன்றும்
நேர்மலி யேகோவாவின் நிறைஅடி தாழ்கல் உற்றும். (2)

### பிதாவுக்கு.

### To the Father.

3. வேறு: ஆதியந்தம் இல்லானாய் அனைத்தும் வல்லோன்
ஆகியெங்கும் வியாபகனாய் அனைத்தின் ஞானன்
நீதிபரி சுத்தம் அன்பு நிறைந்தோன் ஆகி
நிலைமாறான் சுயம்பனுமாய் நிலைத விர்ந்த
பூதலத்தோர் பொன்றுமற் பிழைக்கும் ஆறு
பொங்குதயை ஆளொருபுத்ர னியேசன்
ஜோதிதனை ஈந்ததினால் அவர்கள் மீது
துணையில் அன்பு தோற்றினவா தந்தாய் போற்றி. (3)

### சுதனுக்கு.

### To the Son.

அனாதியினில் இருந்தவனாய் அனாதி பாங்கர்
ஆர்ந்தவனாய் அனாதியே ஆன வாக்கு
மனாதிகட் கெட்டாவிதத்திற் பரிசுத் தாவி
வல்லமையால் ஒருகன்னி வயிற்றுதித்த

ஞாதியின்றிச் சத்குருவாத் திரிந்தாங் காங்கு
சத்தியபோதனைசெய்து முத்திமார்க்கம்
அநாதர்கட்குக் காட்டியுயிர் நீத்து யிர்த்தே
அழிவிலா வீடருளும் மைந்தா போற்றி. (4)

### பரிசுத்தாவிக்கு.

### To the Holy Spirit.

முத்திதரு சித்திபெற, முதலை ஓர,
முற்றும் இருள் உற்றமானிடர்கள் தங்கள்
சித்தமது சுத்தமுற, சத்ய வாக்கைத்
திறத்துணரக், கிறிஸ்துவைத்தம் ஜீவன் என்ன,
நித்தியமும் போர்புரியுஞ் சத்ரு தம்மை
நிக்கிரகம் செய்ய, ஜெபம் நிலையிற் செய்க,
நித்தனின்றும் மைந்தனின்றும் நீணிலத்து
நேருபரிசுத்தாவி நிமலா போற்றி. (5)

### அவையடக்கம்.

### Diffidence to the Learned.

4. வேறு: கடவுளின தருள்பெற்றுக் கனமகிமை
உடன்எகிப்தோர் குடைக்கீழ் ஆண்டு
நடைதனினில் ஒழுக்கம் அன்புதேவபயம்
சத்தியமும் நன்றாய்ப் பூண்டு
புடவியர்கள் வியக்குபுகழ் பெற்றிருந்த
புண்ணியன் யோசேப்பின கீர்த்தி
அடைவுடனே பாவலர்முன் யான்குளறல்
எதுபோல ஆகும் என்னில், (6)

மண்ணதினால் மனைவனைந்தே அன்னதினால்
சமையல்செய்து மக்கள் ஆடல்
ஒண்ணும், இனும் ஓர்யாற்றில் ஒருக்காலும்
ஒருகாலும் ஒழுக்காப் பையல்
விண்ணதைநண்ணுதல்போலக் கண்ணுறுமா
விஸ்தார சக்கரத்தில்
எண்ணம் இலா திறங்கினேன் நீந்திச் சேர்ப்
பேறிடுவேன் என்பபோலும். (7)

விரிகிரண வெண்கதிர்நேர் மின்மினியும்
விளங்குவனென் பதுபோல் ஆகும்
உரைவல்லோர் இவ்வுரையென் புன்னுரையா
யிருக்கினுமிக் குறைக்கல் உற்ற
தரைபதியாம் யோசேப்பின் தன்மகுணஞ்
சொலும்தாகம் கொண்டேன் என்று
வரையாமல் ஏற்றிடுவார் மகிழ்ந்திதனைப்
போற்றிடுவார் வழங்கத் தானே. (8)

நாடு.

Country.

5. வேறு: பாட்டு நாயகன் யோசேப்புப் பண்புளான்
ஈட்டு கீர்த்திசேர் காதை யெழுதமுன்
எட்டிற் கண்டபடிக்கவன் எய்திடும்
நாட்டு வண்மைசி றிதுந விலுவாம். (9)

நாட்டின் பேயர்.

Names of the Country.

3. வேறு: நாடதினு மஞ்சொல்லின் நல்ல நோவா
நண்மகன்கா மின்மகன்கா னுமென் நாமன்
நாடிவந்து பதிந்ததின்கா னன்நா டென்றும;
நாதமுனி ஆபிரகாம் வித்தை நாதன்
நாடரிய இதில்நாட்டு வோமென றந்நாள்
நவின்றதின்வாக் குத்தத்த நாடே என்றும்;
கூடும்எபி ரெயர்குலத்தின எபிரே நாடு;
குலவுபெலிஸ் தர்வரலால் பலஸ்தீன் என்றும்; (10)

இசரவேல் என்னுமியாக் கோபின் வம்சம்
ஈண்டிஇஸ ராவேல்நா டென்; றிஸ்ராவேல்
தசகோத்ரம் பிரிந்தபின்பி ரண்டாம் தேவ
தலமுறுங்கால் தலம்ரோமர் வசம்உறுங்கால்
பசந்ததாம் யூதேயாப் பதிதான் என்றும்;
பாழ்ஞ்சிறையா இஸராவேல் பாபி லோனில்
வசங்கியபின் பரிசுத்த வாசம் என்றும்;
வாய்ந்தஎழு காரணப்பேர் வழங்குந் தானே. (11)

நாட்டின் மகத்துவம்.

Magnanimity of the Country.

3. தானன மெய்க்கடவுள் தரணி தன்னில்
தவத்தினர்க்குக் காட்சிதந்த தலமி தாகி
வானோர்தே மைந்தன் அவ தரித்து மாந்தர்
வாழ்கவழி காட்டினநா டிதுவே ஆகித்
தேனோடும் பாலோடும் தேசம் ஆகித்
தீர்க்கர் அப்போஸ்த லர்களது வாசம் ஆகி
நானாநா டெவற்றினுமே உயர்ந்த கானன்
நாடல்லால் நாடொன்றைக் காணோம் காணோம். (12)

நாட்டின் எல்லையும் விஸ்தாரமும்.

Boundary and Extent of the Country.

6. வேறு: மெதித்ரோ னியாக் கடல் இதன் மேற்கு
மேவிடும் லீபனோன் வடக்குக்
கதித்தஏ தோம்நா டுடன்சின்பா ருன்என்
கடுவனாந் தரங்களாம் தெற்கு
மதித்தஅ ராபி தேசமாம் கிழக்கு
மற்றிதன் நீளம்நூர் பத்தாம்
எதிர்த்தவிஸ் தாரம் சராசரி எழு
காதமாம் எல்லையும் அளவும். (13)

ஊர்கள்.

Provinces.

6. இந்நாட் டுள்ள ஊர்கள்நான் மூன்றும்
இஸரவேல் மைந்தர்கள் பதின்மர்
விந்தைசேர் உருபன் காத்துயூ தாசி
மேயொன்தாண் பெனியமீன் ஆசேர்
புந்திசேர்ஈச ஷார்நவு தலிசே
புலோன்மிகப் பார்புகழ் யோசேப்
உந்திசா ரிருவர் மனசேஎப் ராயீம்
உடையபே ரால்வரும் ஊரே. (14)

யோசேப்பின் பிறப்பு வளர்ப்பு.

Joseph's Birth, &c.

3. வேறு: இந்தமகா தேசமதில் ஈசன் சொற்போல்
இருந்தனர்கள் ஆபிரகாம் ஈசாக்கி யாக்கோப்

மைந்தனியோ சேப்பிதனின் வளர்ந்தான் தந்தை
மகிழ்ந்தன்பு செய்மனைவி ராகே லின்பால்
சுந்தரமாய் இலங்குமே சொப்பொத் தாமில்
செல்லுசகம், பன்னிருநூற், றைம்பத் தொன்பான்
விந்தையதாய்த் தோன்றிவர்த் தனையென் றர்த்தம்
விளங்கியோ சேப்பெனும்பேர் வழங்கப்பெற்ருன். (15)

தந்தையகம் பதினேழு வயதின் மேய்த்தான்
தந்தைபால் தமயர்தப் பிதஞ்சொல் வாருல்
தந்தையவயோ திபத்துதித்தா னென்றே மற்ரோர்
தம்மினன்பு தீந்தவன்ன அங்கி தந்து
வந்ததினுல் சோதரர்கள் வன்கண் ஆகி
வருநாளில் தான்ஒருசொற் பனங்கண் டதைத்
தன்தமய ருடன்நவில அவரோ தம்பி
தன்னைமிக வெறுத்தார்கள் சட்டை செய்யார். (16)

7. வேறு: பாரபட் சம்செயல் பாலர்ப் பெற்றவர்
பாரியகுற்றமாம் பத்தன யாக்கொபு
வாரம தோரமாய்க் காட்ட மைந்தர்கள்
கோரம தாகினர் கடுமை காட்டினர். (17)

யோசேப்பின் கனு.

Joseph's Dream.

8. வேறு: சேருற்றத வத்தினர் செந்தலை தாழுதல்போல்
காருற்றவ யல்விழு பொற்புறு காரியை
கூருற்றவ னையரி கொண்டுசு கோதரர்கள்
ஏருற்றுத் தேசுமை ஏற்றிடு போழ்தினிலே, (18)

9. வேறு: என்னுடைய சும்மையதெ ழுந்துநிலை நிற்க
அன்னதைஉம் அஞ்சுமைகள் அஞ்சலிசெய் தாழ்ந்த
என்னமொழி பின்னவனை யென்னடநீ எம்மை
மன்னவனு ஆளுவையோ என்னவேவ குத்தார். (19)

பின்னுமொரு பேரொளியும் அம்புலியு மின்னும்
பன்னெருமின் மீனவையும் பாங்குடன் வணங்கிற்
றென்னவுமே இன்னெருநாள் கண்டகன வென்று
சொன்னவனை முன்னவர்தொ டர்ந்துபகை சூழ்ந்தார். (20)

சொன்னவனை அன்னபடி சோதரர்கள் ஓர்நாள்
மன்னவென ஆழ்ந்தடிவ ணங்கவரு மோகொல்
என்னமன மெண்ணிநிலர் எக்கிடுவர் ஆறும்
வன்னியது வாயுவெழ மண்டியெழும் வண்ணம். (21)

முன்னையிலும் பின்னதிகம் மூண்டனர்ப கைதான்
பின்னவனை அழிந்து கெடுமாறவருள பேசி
அன்னசமயத்தவனை ஐயனிணகற்றி
முன்னவர்தொடார்ந்துயிர்முடிக்கும்வகை செய்தார். (22)

தந்தைசெவி இக்கனவு சார்ந்திடவு மற்ற
மைந்தரில்மி குந்தஇகல் வந்ததை யுணர்ந்து
தந்தைஅனை சோதரர்நின தாள்பணிதல் இன்றென்
அந்தமக னுசுருமொழி தந்துளதை வைத்தான். (23)

### அவன் தமயன்மாரைப் பார்த்து வரப்போனது.

### His going on errand to his Brother.

வேறு:

2\. தொலைவிலா ஆடு மாடு தோன்றலுக் குள்ளயாவும்
பலன்பட்ற் கிரைய திறைப் பசியபுற் றடங்கள் தேடிப்
பலபல காலம் தனனில் பாங்கொடு மக்கள் ஓட்டித்
தொலையிற்சென்றவற்றை மேய்த்துத் தொல்பதி மீள்வார் அன்றே. (24)

இப்படி இருக்க யாக்கோப் பிள்ளைஞனைச் சிகேம் சென்று
ஒப்புடன் ஆடு மேய்க்கும் உனதண்ணன் மாரைக்கண்டு
எப்படி அவரும் ஆடும இருக்கின்றா ரென்ன வோர்ந்து
செப்பவர் செய்தி கொண்டு திரும்பவென் றனுப்பி னானே. (25)

சொல்லிய படியோ சேப்பு துரிதமா அவ்வூர் ஏகிச்
செல்வழி தப்பக கண்டோர் சிலனீ யாவ னென்னச்
செல்வர்என சேட்டர் எங்கே சேர்ந்தசம் மேய்த்தார் என்னச்
சொல்லினன் தோத்தானுக்குச் செல்வதாச் சொன்னார் என்றே. (26)

### தமயர் சதிசோதனை செய்தது.

### Murderous counsel of the Brothers.

3\. வேறு: என்னவும்யோ சேப்நடந்து தோத்தான் ஏகி
எண்ணமுள அண்ணர்தமைக் காணு முன்னர்

அன்னவரோ முன்னையுறும் அடத்தினாலே
  அதோவருகின் றான்எமடி சனவா திக்கன்
உன்னி அவன் உயிர்முடித்துப் புதைத்து விட்டே
  ஊன் மிருகம் உண்டதென உரைப்போம் நன்று
முன் அவன்தான் கண்டகனா முடிவெவ் வாறும்
  மூடிருங்கள் என்றார்கள் மூர்க்கர் தாமே. (27)

ரூபன் அவனைத் தப்பிவித்துக் குழியில் போடுவித்தது.

**Rueben intervening & getting Joseph thrown in a pit.**

மூத்தவன்ரூபேன் அவனை அவர்கை நீக்கி
  முதிர்தாதை பாற்சேர்க்க முன்னி அனைனோர்ப்
பார்த்துநீர் உயிர்பதைக்கச் செய்யா திங்கோர்
  பாழ்ங்குழியில் உயிரோடே படுக்கப் போடும்
ஏற்றதிது என்ன அவர் இசைந்தார் யோசேப்
  எய்திடவும் கால்கள்போட் டிழுத்துப் பற்றிப்
போர்த்தவனை அங்கிகொண்டார் புகழில் லாதார்.
  போட்டனர்நீர் இல்குழியிற் புரையில்லானை. (28)

போடமுனம் யோசேப்பு அண்ணரோ நீர்
  போகவிடும் தந்தையிடம் என்றே கூவி
ஓடலுற்றான ஓலமிட்டான் கண்ணீர் விட்டான்
  உறுபசியால் தாகத்தால் ஒளிர்முகந்தான்
வாடினான் வதங்கினான் வன்மனத்தோர்
  வாழ்மகனுக் கநுதாபம் கொள்ளார் ஆங்கே
கூட்டுற்றார் செவிடர்போல் இருந்தார் தம்பி
  குரவையிட்டுக் குழிதனிலே போட்டார் அந்தோ. (29)

அவனைக் கொலைபுரியாது விற்றுப்போட யூதா ஏவினது.

**He was forthwith sold to Ishmalities without Rueben knowing it, under instruction of Juda.**

போட்டபின்பு புசிப்பதற்கா உட்கார்ந் தார்கண்
  போனவிடம் பிசின்தயிலம் வெள்ளைப் போளம்
கூட்டுசம்பாரம்பல ஒட் டகைமேல் கொண்டு
  கூட்டமாக் கிலேயாத் திருந்து கூடிக

காட்டுவழி எகிப்திற்கே இஸ்மவேலர்க்
  கண்டிவர்க ரந்தனினம் கனிட்டன் தன்னை
நீட்டினாற் பலனுண்டு தம்பி ஆவி
  நீக்கிலெனப் பழிமறைக்கில் எனென்றான் யூதா. (30)

## இஸ்மவேலருக் அவனைவிற்றது.

## Sold to Ishmalites.

பின்னும்இவன் நம்மோடு பிறந்தான் அன்றோ
  பிறக்கிடுநம் மாமிசத்தோர் பின்னம் அன்றோ
என்னவுமே அவரெழீஇ இளைஞன் தன்னை
  எடுத்திஸ்ம வேலர் விலைஈதென் றீந்த
மினனுமிரு பதுவெள்ளிக் காசை வேண்டி
  விற்றார்கள் கொண்டவர்க ளெகிப்து மேவி
மன்னவன்பார் வோன்பிரதா னிபோத்திப் பார்க்கு
  மறுவிலைக்கு விற்க அவன் வாங்க லுற்றான். (31)

விற்குமுனம் மேன்மகன்தான் அண்ணன் மாரை
  வேண்டலுற்றான் விம்மலுற்றான் செங்கை கூப்பிக்
கற்குமுனம் விழுவதுபோல் அவர்கள் காலிற்
  கையில்வீழ்க் தலறியழத் தள்ளி விட்டார்
விற்கும்விலை கொடுத்தவர்கள் விடுவ ரோதான்
  விடலையெனக் கண்டதினாற் கொண்டு சென்றார்
மற்குமரர் மனோசாட்சி அற்றோர் ஆகி
  வயோதிபற்குப் பொய்உரைக்கச் சூழ்ச்சி செய்தார். (32)

## ரூபன் தம்பியைத்தேடிக் காணாமற் புலம்பல்.

## Rueben searching for his Brother and lamenting his loss.

5. வேறு: சுத்த னாயோ சேப்புச்சு தன்றனை
வர்த்த கர்க்குவ ழங்கையில் ரூபன்றான்
அத்தத் தோரிடம் உற்றான திகிலான்
வைத்த அக்குழி தேடினன் வாய்த்திலான் (33)

வத்தி ரத்தைக்கி ழித்துவ ருந்தினன்
மத்தர் சோதரர் பாலோடி வந்தனன்
எத்தி றஞ்செய்திர் எம்பியை யென்றனன்
அத்தி றஞ்சொலார் அவ்வுழித்தேடென்றார். (34)

எத்தி சைக்கியான் ஏகுவன் எம்பியை
கர்த்த னேஎங்கு காண்குவன் என்றனன்
கத்திக் கத்திக்க னவழி தேடிப்பின்
அத்த னுக்கியான் யாதுரைப் பேனென்றான். (35)

குலம கன்றந்தைத் தன்மைமிக் குற்றுக்கோல்
உலைமுன் ஆமெழு கென்னஉ ருகினை
தலைமை காரிச ரேலருள் தங்கிய
நிலைமை பின்னரின் ரட்டிப்பு நீடினர். (36)

## தகப்பனுக்குப் பொய்யுரைத்தல்.
## False report to the Father.

இந்த வாறுரு பேனழு தேங்கிட
மைந்தர் கூடியோர் கொச்சைவ ளைத்ததில்
சிந்து சோரியில் வர்த்தனன் சித்திரம்
தந்த அங்கியைத் தோய்த்தனர் தாரியில். (37)

கண்ட னம்இது மைந்தங்க வசமோ
கண்ட ருளெனத் தந்தைமுன் காட்டிடக்
கொண்டு போகவ னுப்பினர் கோவெனக்
கொண்ட தென்மக னேவனக் கொல்லுமா. (38)

என்று சட்டை கிழித்துத்த னதிடை
துன்றி ரட்டுதொ டுத்துத்து யரினல்
சன்றி ளங்களாந் தான்வெகு காலமாக்
குன்றி லாதகு மாரர்கு மாரிகள். (39)

சென்ற னர்தந்தைச் செம்முகம் நோக்கியே
நின்ற னர்முறை நீள்துயர் ஆற்றிடப்
பொன்றி என்மகன் போம்வழி போகுவன்
என்று தேம்பிப்பு லம்பிஇ ரங்கினன். (40)

## தகப்பன் புலம்பல்.
## The Father's lamentation.

10. வேறு: கண்மணியே காதலனே காலம்போய் யான்பெற்ற
ஒண்மணியே வீட்டிற் கொளிர்விளர்கே உண்மைநிறை
சொன்மணியே வண்மணியே சொல்லரிய நன்மணியே
பன்மணியும் எற்குப் பதராகச் செய்தனையே. (41)

உன்தாய் இறந்தத்துயர் உன்னால் மறந்தேன்யான்
மைந்தா நீ வந்தபின்பு வாழ்ந்தேன் மனமகிழ்ந்தேன்
விந்தைக் கனுப்படியே வேந்தாவை என்றிருந்தேன்
எந்தை அருளால் சுகம்பெறுவம் என்றிருந்தேன். (42)

எண்ணின எண்ணமெல்லாம் இவ்வண்ணம் போவதற்கு
விண்ணவன்றன் எண்ணமது மேலாய் இருந்ததுவோ
அண்ணன்மா ரைப்போய் அடவியிலே கண்டுவா[illegible]
எண்ணமில் லாதே நீ ஏகவும் யான் செய்தனனே. (43)

போவென்றேன் நின்னையான் போன விடந்தொடர்ந்தே
ஆவென்று கொன்ற அரணியவி லங்கானேன்
சாவென் றறிந்தாக்கால் சாற்றிலனே போவென்ன
யாவென் றுரைப்பேன்யான் ஆதித் திருச்செயலை. (44)

சகோதரர் புரிந்த ஆறுபாவம்.

## Six sins implied in the Brothers' treacherous act.

**7. வேறு:** இந்தவோர் செய்கையால் எழுந்தவறு பவம்
முந்துநாள் தம்பியை முடித்த காயினைபோல்
உந்தினர் உடன்பிறப் புருக்கம் விடுத்தனர்
அந்தமில் சோதரக் கொலைஞர் ஆயினர். (45)

முந்தவே மனையிழந் துடைந்த முதியனைப்
பிந்தியும் மகவிழந் தேங்கல் பெருக்கினர்
தந்தையிம் மகனின்மிக் கன்பு தந்ததும்
இந்தனா துயருற என்றும் தேர்ந்துளார். (46)

பொய்சனைக் கூட்டினர் புருவைக் குருதியிற்
பையனின் அங்கியைத் தோய்த்துப் பையவே
ஐயன்பால் தரஅவன் வனமா அழித்தது
மெய்யென வெண்ணினன் விருத்தன் வெம்பினன். (47)

முன் அவர் செய்பிழை முதியற் குரைத்ததால்
பின்னனைப் பிதாமிகப் பேணி வந்ததால்
வன்கண்மை ஆகினர் வன்மம் பூண்டனர்
பின்னுமே பகைத்தனர் பெரிதொன் றுரினே. (48)

படுகுழிப் பாலியன் பதைத்தல் பார்த்திலார்
இடுமுடல் சிதைந்திறும் படிக்கே எண்ணினர்
கடுஞ்செயல் இதனினும் உளதோ கண்ணுற
இடும்பர்கள் இவரினும் உளரோ இகத்திலே. (49)

சகலதி மைக்குமே மூலம் தனவிழை
விகலினால் இதுபெறத் தொண்டா வீந்தனர்
மகதன இன் உயிரினும் மகத்தா மதித்தனர்
சகமதின் அவன்படு தாபம் எண்ணிலார். (50)

போத்திப்பார் வர்த்தனனை வீட்டுவிசாரிப்பில் அமர்த்தினது.
Potiphar appointing Joseph his steward.

2. * வர்த்தன ன்தன்னை வாங்கி வள்ளல்பார் வோனின் மந்திரி
வித்தகன் போத்திப் பார்தன் வீட்டினில் வேலை ஆளா
வைத்தனன் அவனும் ஆண்டை மனப்படி நடந்து வந்தான்
கர்த்தனும் அவன்செய் யாவும் சித்தித்திட அருள்கூர்ந் தானால். (51)

* வர்த்தனன் = யோசேப்பு = குசை.

வர்த்தனன் தந்தை யோடு வதிந்திட வாஞ்சித் துந்தன்
கர்த்தனை மகிழச் செய்யும் கருத்துடன் இருந்தான் அன்னோன்
எத்தனை வருத்த மான வேலைகள் ஏவினாலும்
சித்தமாத் திருத்தமாகத் தீவிரத் தோடே செய்வான். (52)

ஆதலின் போத்திப் பார்தன் ஆஸ்திகள் யாவற் றிற்கும்
ஆதாரத் தனதில் லானை அன்றிமற் றனையா விற்கும்
ஆதரை தனதா னியமா டானைத் திற்கும் ஆசப்
பேதமில் மனத்தின் னோனைப் போதகாரி செய்தான். (53)

இத்திறஞ் செய்த பின்னர் இளைஞனு மகிழ்ந்து வானோர்
கர்த்தனின் கண்முன் போலக் கடமைகள் பலவுமாற்றிப்
பத்தியின் பணி இயற்றும் பத்தனி னிமித்தம் ஆயெ
கிப்தனின் வீட்டைத் தேவன் சீராக்கிடச் செய்தான் அன்றே. (54)

போத்திப்பார் வீடு வர்த்தனை அடைந்தது.
Potiphar's house increasing.

11. வீட்டில் உற்றிடு தானியந்தனம் மேவு புத்திரர் பவுத்திரர்
நாட்டில் உற்றிடு பல்வகைப்பயிர் நல்ல மாடுகள் ஆடுகள்
தேட்டம் யாவும மோக மாதல்தெ ரிந்து தன்றுணை வொன்றுமே
நாட்ட மாகியல் வர்த்த னன்வசம் நம்பி விட்டனன் யாவுமே. (55)

## போத்திப்பார் மனைவி வர்த்தனனை இச்சித்தது.

## Potiphar's wife lusting after Joseph.

இந்த வண்ணமி ருந்த காலையில் ஏந்தல் போத்தியார் ஏந்திழை
சுந்த ரம்மிகு வர்த்த னன்உயர் தோள்கள் சேர்ந்திட எண்ணியே
எந்த வேளையும் அந்த வாறுசொல் ஏற்று வாள்விழி சார்ததுவாள்
இந்த மாபவம் என்த யாபரற் கேய்ந்த தல்லவே என்றனன். (56)

பின்னு மன்னவன் பெருகு வீட்டிலே உன்னை யன்றியொ ழித்திலன்
தன்ன தியாவையு மென்னி டத்திலே தந்த னன்மிக நம்பியே
மன்னன் என்னெஜ மானன் தன்னுடை மனைவி நீயென்க் குன்னையே
சொன்ன சொற்படி உன்னை யான்தொடல் தோஷம தோஷமே என்
[றனன். (57)

என்று சொல்லியும் அன்றும் இச்சையின் கன்று வாள்சில எல்லை
[யாய்
மன்றல் நாயகன் வெளியிற் சென்றிட மனையு ளோர்களில் லாதநாள்
மன்றம் உள்ளயோ சேப்பு வீட்டினில் மன்னன் வேலையாய் வந்திடச்
சென்றுமேலவன்கொண்ட அங்கியைத தீண்டி னாள்மி துதிண்ணமாய்.

தீண்ட வும்தன தங்கி யையவள் திக்க ரத்தினில் விட்டொரு
தாண்டிலே வெளி தாண்டி னொறி தாண்டி லானிது காண்டலும்
மாண்ட னள்மனம வெட்க மாகியே மீண்ட னள்மனை யாரொட
பாண்ட மாயொரு பழிசு மதநினள் பாதகி பெருங் காதகி. (59)

வீட்டு ளோர்களைக் கூட்டி னாள்மிக வாட்ட மாமுகங் காட்டினாள்
தீட்டு காசதின் மீட்ட தொலைடெபி ரேய நாட்டனை நாயகர்
நாட்ட நாடினர் வீட்டு நாயனாய் நன்கு பண்ணவென் மாட்டுகை
நீட்ட நானிங் கூச்ச லானுடை போட்டே ஓடினன் என்றனள். (60)

வேறு:

2. மின்னுமங் கியைத்தன் பர்த்தா மீளவும் காட்டி முன்னே
சொன்னவா றிசைத்தும் உந்தன் தொண்டனிவ் வண்ணஞ்செய்தான்
என்னவோர் சொல்லுங் கூட்டி இயம்பிட வெகுண்டன னேனை
மன்னவன் மந்திரி ஆனோன் வன்சிறையதனின் வைத்தான். (61)

## வர்த்தனன் சிறையுறல்.

## Joseph is put in prison.

வைத்தபின் பன்மூ வாண்டு வைகினன், வர்த்த னன்பால்
கர்த்தனும் கிருபை நாளும் வைத்தனன், காவல் மேலான்

நித்தமும் பட்சம் வைத்து நீள்சிறைச் சாலை யுற்ற
அத்தனை பெயரும் அன்னோற் சமைநிடச் செய்தா னன்றே. (62)

அத்திறம் இருக்கி யோசேப் பனைத்தையும் நடத்தும் நாளில்
புத்தியாய்ப் பத்தி யாகப் புகழுற யாவுஞ் செய்ய
அத்தனும் அருளஅ ளித்தான் அரியவக் காவல் மேலோன்
எத்திரம் நடந்ததெனன்ஞர் எண்ணமு மின்றி வாழ்ந்தான். (63)

வர்த்தென்புர்க் கோட்டைக்குள்ளே வன்சிறை இருந்த காலை
அத்தர் சாஸ் திரிதான் வேதத் தோர் பெரும் பாகம் சொல்லாற்
பெயர்த்தனன, லட்சா லட்சம் பெயர்கள்பூ ணிருள்வி லக்கைப்
பெயர்த்தனன் அவர்க ளுக்குப் பேணிஞ ஹுதம மீட்பே. (64)

பனியனெனஞ் பவனை யாங்கே பழிப்புறு குருடர் வைக்கப்
புனிதவே தத்தி னோரப் போற்றுறு நூல்கள் செய்தான்
மனிதரின் சுபாவம் தோறை வகைவகை யுவமை காட்டி
இனிமையிற் செய்தான் மிக்கோன் இரும்புகழ் படைத்தான் அன்றே()

மாதவர் எரேமி தான்யேல் மலையப்பர் பவலு சீலா
ஓதுவன் சிறையி னன்ஞே ஒருவனூற் சனமுற் ருர்கள்
சோதரர் வன்மத் தாலே சூழ்ச்சிசெய் திவனை விற்ருர்
வாதுசெய் வணிகர் வாங்கி மாறினூர் உலகின் கண்ணே. (66)

திகழுறும் எகிப்து தேசத் திறலவன் பார்வோன் நாளும்
மகிழ்வுறு போத்திப் பாரென் மந்திரி தனக்கன் ஞென்றன்
அகமுடை யாள்நோக் கதநிற் கமைவுருச் செய்கைச் காக
வகைதெரி யாவன காவல் வர்த்தனை தன்னை வைத்தான். (67)

வைத்தவன் இருந்தகாலை மன்னவன் பார வோனும்
சித்தத்தோர் கனுவைக் காணச் சிறையுறு வோன்க ளுவிற்
கர்த்தமே செய்கத தேவன அருளவே எகிப்துக் கெல்லாம்
கர்த்தனுய்க் கருப்பின் மாந்தர் கணக்கில காத்தான் காணீர். (68)

செவ்வியல் மேனி யுள்ளாண் செம்மலை முகமு முள்ளாண்
நவ்வியோல் விழியார் யாரும் நசையிலா நோக்கம் மேவார்
உவ்வியல் பிணைக்கண் டாலிக் கனஞ்செய யஜமான் இல்லாள்
எவ்விதத் தாலும் தூண்டி இசைத்திடப் பார்த்தான் தூர்த்தை. (69)

இவ்வழி யவட்கி ணங்கில் என்துயர் தீரும் என்றும்
செவ்விழி யாட்கி ணங்கேல் செய்குவள் யாதோ வென்றும்
செவ்வழி மனத்தோன் பல்லா றெண்ணியும், திறலார் வேந்தன்
தெவ்வரை வென்றாற் போலச் சேயிழை தன்னை வென்றான். (70)

என்னாளாய்ச் சிறையி ருந்தும் எத்தனை பாடு பட்டும்
முன்னாளில் அன்பு கூர்ந்த முதல்வனைத் தூறு செய்ய
உன்னான் எவர்பால் என்றும், உன்னதம் வீற்றிருக்கும்
தன்னான கடவுள் சித்தம் தன்னையே ஆற்றல் உற்றான். (71)

அப்பந்தலைவனும், பானத்தலைவனும் அச்சிறையுற்றது.

**Pharaoh's chief baker and chief butler thrown into the same prison.**

5. வேறு: மான னாமெனப் பத்தும சிபற்குப்
பான வர்க்கம்ப கிருந்த லைவனும்
ஆன அப்பவர்க் கத்தலை வன்னு
மானன் னெஞ்சம் வருந்திடச் செய்ததால். (72)

மிக்க கோபமுற் றவ்விருவோர் தமை
ஒக்க யோசேப்பு றுஞ்சிறைச் சாலையில்
வைக்கச் சஞ்சுகி மேலவன் வைத்தனன்
தக்க தன்மையின் வர்த்தனன் தன்கணே. (73)

அவர்கள் கண்ட கனா.

Their dreams.

இன்னோன் கீழ்வெகு நாளிருந் தானபின்
பின்னோர் ஈர்வரும் ஆசிர வோரிரு
மன்னு சொப்பனங் கண்டனர் மன்னனால்
பின்னும் அவ்வவர் பெற்றிடும் பேறதாய். (74)

கால மேவர்த்த னன்னவ ரைக்கண்டு
சீல சோகமுகம் செவ்வில தேதென
ஏல வேஇரு சொப்பனம் கண்டனம்
சால வோர்பயன் சாற்றிலர் யாருமே. (75)

என்ன யோசேப்பு வர்த்தனன் யாவவை
மன்னு சொப்பனம் பன்னுதல் வானவன்
தன்ன தாமெனப் பானத்த லைவனெண்
முன்னம் மூன்றுகொ டிதளிர் பூக்களாய். (76)

உள்ள ஓர்திராட் சச்செடி உற்றது
கள்ளு சாருக்க னிக்குலை கண்டதில்
தெள்ளு சாறுபி ழிந்துதி றலவன்
வள்ளம் வார்த்தவன் கையில்வ ழங்கினேன். (77)

பானக்காரன் கனவை வர்த்தனன் விளக்கியது.
The chief butler's dream interpreted by Joseph.

என்னக் கண்டனன் என்கன வென்னவும்
அன்ன முக்கொடி முத்தினம் ஆகிடும்
இன்னம் மூன்றுதி னத்தினி றையவன்
உன்னைச் சேர்த்துமுன் வேலைஉ தவுவான். (78)

வர்த்தனன் மன்றட்டு.
Joseph's prayer to him.

அன்ன காலைஅ மோகமாய் வாழும்போ
தென்னை உன்மனத் தெண்ணியி ரக்கமாய்
மன்னற் கென்வர்த்த மானங்கள் சொல்லியே
துன்னும் இச்சிறை நின்றுதொ லைத்திடாய். (79)

உற்ற இச்சிறை யில்எனை உய்த்திடக்
குற்றம ஒன்றுங் குறித்திலன் செய்திலன்
மற்றெ பிரேய நாட்டுவா சன்எனை
விற்றனர்கள வாயென விண்டனன். (80)

அப்பத்தலைவன் கனவு வியார்த்தி.
Chief baker's dream interpreted by Joseph.

செப்பும் அர்த்தஞ்செ விப்படச் செவ்வையென்
றப்ப வர்க்கத்த லைவனும் அங்ஙனே
ஒப்ப வெண்தலை கூடைவெண் மூன்றறச்
செப்ப மாகவ ரசற்குச் செய்ததாம். (81)

அப்ப வர்க்கங்க ளானவை, மேலதில்
ஒப்ப வைத்திருந் தேன்அவை ஒன்றிலா
தப்ப னேபற வைவந்த ருந்தின
சொப்ப னம்என தென்றவன் சொற்றனன். (82)

மூன்று கூடைகள் மூன்றுதி னங்களாம்
மூன்று நாளதில் முமமரம் தன்னிலே

தோன்றல் உன்னையே தூக்குவன் அங்ஙனே
ஆன்ற தேகம்ப றவைஅ ருந்துமால். (83)

என்ன யோசேப்பி யம்புபொ ருட்படி
சொன்ன மூன்றுநான் தொல்பதிப் பாரவோன்
ஜெனம நாளவரச் சேவைசெய் வோருக்கு
நன்மை யானவி ருந்தொன்று நல்கையில். (84)

பான வர்க்கத்த லைவனைப் பண்பிலான்
ஆன அப்பவர்க சத்தலை வன்தனைத்
தான முற்றத னூழியர் தம்நடு
வாகி றுத்திஅப் பானவ்வ சமதாய்ப். (85)

பாத்தி ரங்கொடுக் கஅவன் பற்றியே
தோத்தி ரித்தனன் துப்புறு நற்சுவைக்
கோத்தி ரிக்குலை கோதில்பி ழிந்ததில்
வார்த்துத் தந்தனன் மன்னவன் கையிலே. (86)

அப்ப வர்க்கத்த லைவனை அண்ணல் தன்
சொற்ப டிக்கொடு போயினர் தூக்கினர்
மெய்ப்பு றங்கனு விண்டயோ சேப்பையோ
மப்பின பானக்கா ரன்மறந் தானரோ. (87)

2. வேறு: அப்பவர்க் கஞ்செய் வோரின் அதிபதி கனவின் அர்த்தஞ்
செப்பமில் லாத தேனும் தேர்பவற் கூனம் எனும்
தப்பற வெளிப்படுத்தும தயாபரன் செய்கை ஆமால்
எப்புரு டனுக்கும் அஞ்சா தியல்பினை மொழிந்தான மாதோ. (88)

சிறை நீங்குதல்: பார்வோன்கண்ட சொப்பனம்.

Release from prison: pharaoh's dream.

12. வேறு: இரண்டு வற்சர இறுதியிற் பாரவோன் அலைகள்
உருண்டெ ழுமபிசும் ஓர்நதிக் கரைதனில் நிற்கத்
திரண்ட நல்லுருச் செழுமையுஞ் செறியுமேழ் ஆன்கள்
இருண்ட அந்நதி அகமெழுந் தேறிப்புல் கறிக்க. (89)

விரும்பும் அந்தமும் மேனியும் இல்லதோர் ஏழு
தருமபு போகறிம் பசுக்கடாம் அவையினை தோன்றிக்
கரும்பின் தின்றன கடிதினில் அவற்றினைக் கண்டே
யிரும்பு கழ்படை இறையவன் நித்திரை எழுந்தான். (90)

எழுந்த பின்இனும் நித்திரை போகவும் எழுந்த
கொழுமை யாமொரு முதலிலே கொண்டவேழ் கதிர்கள்
விழுமை யாவளர் அவற்றையே விழுங்கின, பதராய்
எழுகொண் டற்படத் தீந்ததாங் கதிர்களோ ரேழே. (91)

இன்ன மெய்க்கனுக் கண்டுடன் இறைவனும் விழித்தே
அன்ன காலையில் அவன்மனம் அயர்வுறிஇப் பேர்போம்
அந்த கர்ளகிப் துள்ளசாஸ் திரிகளை அழைத்துச்
சொன்னசொப்பனப் பொருடனை யொருவருஞ் சொல்லார்.(92)

பானத்தலைவன் வர்த்தனனை அரசனுக் கறிவித்தல்.
Cheif butler brings Joseph to the King's notice.

12. இத்த கையிருந் திடரசம் ஈகுவோன் இறைஞ்சி
பித்தன் என்றன் றிக் கேடுமா பெரிதென இன்று
சித்தத் தெண்ணினன் தேவரீர் சினமிகக் கொண்டு
பத்தன் என்னையும் அப்பவர்க் கப்பதி தனையும். (93)

சிறையில் உயத்திட இருவருஞ் சிறுமையோ டதனில்
உறையும் போதொரே இரவினிற் சொப்பனம் உற்றே
நிறையு நோமதி எபிரெய னுஞ்சிறை நேர்ந்து
குறைவில் காவல்மே லோன்பணி குறித்துவை செய்வான். (94)

செய்து ளான்கணே செப்பவும் செப்பமாய் அதற்குச்
செய்த னன்பொருள் செய்ததின் படியவ ரவர்க்கன்
கெய்தி என்னைமுன் ரும்தினம் ஏவலின் நிறுத்தி
வெய்தின் மற்றவன் வெஞ்சமு வேறவும் விதித்திர். (95)

அரசன் வர்த்தனனை அழைப்பித்தல்.
The King sends for Joseph.

என்று சொல்லவும் பாரவோன் எபிரெயன் தன்பால்
சென்ற ழைத்துவ ரச்சொலத் தீவிர மாக
நன்றெ னச்சவ ரழும்பணி கல்லுடை புனைந்து
நின்ற னன்திரு பன்முனம் நீளகரம் புதைத்தே. (96)

அரசனை வர்த்தனன் கண்டது.
Joseph's visit to the king.

வந்த னுசையை அரசனு மகிழ்வுடன் நோக்கி
முந்தி ராத்திரி யொருகனுக் கண்டதை மொழிந்தேன்

எந்தன் தேசஞா னிகளெலர் சனாம்பய னியம்பார்
உந்த னாலதா மெனவுமே உரைத்தனர் என்றான். (97)

7. **வேறு:** என்னவும் வர்த்தனன் எண்ணிச் சொல்லுவான்
மன்னகேள் என்தனால் வருவ தொன்றிலை
மன்னர்செய் கடவுளால் வருதும் வாழ்வுதான்
அன்னவன் தருமுறை அருள்வன் என்னவே. (98)

பார்வோன் தன் கனாவைச் செல்லல்.

Pharaoh relating his dream to him.

பாரவோன் வர்த்தனன் பாலிற் பன்னுவான்
ஓர்நதி யோரம்நான் நிற்க வோரெழு
கோரமில் உருவமும் கொழுப்பு முள்ளஆன்
வார்தராற் றெழுந்துமேல் மருங்கில் மேயவே. (99)

செப்பமில் பசுக்களேழ் சிவல் ஆமவை
ஒப்புள் எகிப்தினில் ஓர்பாற் கண்மலங்
தப்பற அவற்றையே சதைத்து நுங்கின
உப்பில தம்வயி றுற்ற தென்றும்போல். (100)

இப்படிச் சொப்பனம் கண்டெ ழுந்துநான்
ஒப்புடன் உறங்கியோர் கனாப்பின ஓர்ந்தனன்
செப்பிட வொரேமுதல் உற்றுச் செவ்வையா
மெய்புறக் கதிர்களேழ் விளங்கி யோங்கின. (101)

ஓங்கிய அவற்றையே ஒருங்கு நுங்கின
தாங்கிய கொண்டலிற் றீந்து சாவியாம்
பாங்கிலாக் கதிர்களேழ் பாங்கா மேவிவே
தூங்குசாஸ் திரர்பொருள் நுவல்க லாரென்றான். (102)

பார்வோன் சொன்ன வியர்த்தி.

The dream interpreted by Joseph.

என்னவும் சொப்பன மிரண்டு மொன் றுதான்
மன்னனுக் குறுத்தினன் வருவ தைப்பரன்
அன்னவேழ் நற்பசு வாமேழ் ஆவனம்
அன்னவேழ் நற்கதிர் ஆமேழ் ஆண்டதான். (103)

பின்னுறுங் குருபமாம் சிவற் பெற்றமும்
வன்னுறு மேழ்வரு ஷங்க ளாகுமே
மன்னுறுங் கொண்டலிற் றீந்து வாடிய
கொன்னுறு மேழ்கதிர் கூறேழ் ஆண்டுதான். (104

முன்னையேழ் வருடமுஞ் சுபிடம் முக்கியம்
பின்னையேழ் வருடமும் பெரிய பஞ்சமாம்
இன்னில மீச்சுரன் இயற்றுஞ் செய்கையை
இன்னவா றிறைவனுக் குணர்த்த வெண்ணினன். (105)

தேசமெங் கெங்குமே செழுமை சேர்ந்திடும்
பேசரும் ஏழ்சமை பிறங்கி யோங்கிடும்
நாசமாம் ஏழ்வரு ஷம்பின் நண்ணிடும்
மூசிடும் முழுவதுங் கொடிய பஞ்சமே. (106)

இன்னவேழ் ஆண்டதில் எய்துஞ் சூனியம்
முன்னையேழ் ஆண்டுள முற்றும் பூரணம்
என்னவா மெனச்சொலி யெடுத்து றங்குமால்
சொன்னசம் பூரணம் தோன்றி டாமலே. (107)

வர்த்தனன் பஞ்சநிவிர்த்திக் குபாயஞ்சொல்லல்.

Joseph proposes how to avert the famine.

வேறு:

13. இந்தச் சொப்ப னம்மி ரட்டித் தேந்தல் கண்ட காரணம்
விந்தை நாத னெண்ணு மெண்ண மெய்மை யாவர் தெய்துமால்
புந்தி வானொ ருத்த னைப்பு ரிந்து தேசப் புறமெலாம்
நந்த வில்லா வுத்தி யோக னுக்க நாடு மன்னவா. (108)

மேலு மாகா ணத்துக் கோர்வன் மேன்ம ணியம் வைத்துமே
சால வேகிப் பத்து நாடு சார்ப லங்கள் தன்னிலே
ஏல சம்பூ ரண-முள்ள வேழ்வ ருஷ மாமறு
கூல கால மைந்தி லோர்பங் காம வற்றைக் கூட்டுவாய். (109)

கூட்டு மிந்தத் தானி யங்கொ ணர்ந்தம் பாரங் கூட்டுபின்
வாட்டு மாண்டே ழுக்கு மிக்க வாரு பஞ்ச மதற்கொரு
தேட்ட மாக வைத்து நீவழங்கு சீரினென்னவே
நாட்டு வேந்த னுஞ்ச பையினோரு நன்றெ னச்சொனார். (110)

### பார்வோன் வர்த்தனனை மெச்சினது.

### Pharaoh approves Joseph.

பார வோன்ம கிழ்ந்து தன்ச பையைப் பார்த்துத் தேவனே
சாரு மிம்ம கானு பாவன் சாற்ற வுங் கிடைப்பனோ
ஒரு மென்றியோ சேப்பை நோக்கி ஒருவ னில்லை யுனக்கிணை
சாரு மிவை யாவின் ஞானந் தனக்கே தேவன் தந்தனே. (111)

### அவனை எகிப்துக்கெல்லாம் அதிகாரியாக்கல்.

### He makes Joseph ruler over all Egypt.

ஆத லானி நம்ம னைக்கெ ஜம்மா னுக வீற்றிராய்
ஈதன் றியெ கிப்துக் கெல்லா மாதி காரி யாக்கினேன்
போத நஞ்ச னம்முன் வாக்கைப் போற்றி செய்து தாழ்ந்திடும்
ஆத னம்மொன் றிற்கே உன்னி னதிக மாக விருப்பென்யான். ()

என்னச் சொல்லிக் கையா ழிக ழற்றி யிட்டா னவன்கரம்
மின்னு மெல்லி தாமு டையை மேல ணியச் செய்துபின்
பொன்னி னாகு சரப்ப ணிக ழுத்திலிட்டுப் பொலிவுடன்
தன்ன திரண் டாமி ரதந் தன்னி லேறப் பண்ணியே. (113)

பவனி வரச் செய்தெல் லோரும் பணியு முழந் தாளிடும்
கவனங் கவனங் கவன மென்று கட்டி யங்கள் கூறுவித்
தவனி யாளவோ னியானென் றுனு முன்ற னுக்கினை கடந்
தெவனுந் தன்கை கால்க ளையெடுப்ப தில்லை யென்றனன். (114)

### வர்த்தனனுக்கு பட்டபேர் தரித்து மணம் புரிவித்தது.

### He gives him a new name and gets him married.

என்று மறை பொருடெ ரிவோன் என்னு நாம மிட்டுமே
பொன்றி லாப்புகழ்ஓன் நகர் போத்திப் பார சாரியன்
ஒன்று புத்தி ரிஅஸ் னத்தை யொப்பி லாச்சி றப்புடன்
மன்றல் செய்து வைத்த னன்ச மங்க ளங்கள் கூறியே. (115)

வர்த்தனன் தேசஞ்சுற்றிப் பார்த்தல்.

Joseph takes a view of the country.

வேறு:

14, யோசேப் பெகிப்துத் தேசமதின் ஒங்கல் பார்வோன் முன்னிலையில்
தாசன் ஞக நிற்குங்கால் தருமா றைந்து வயதாகும்
தேசஞ் சுற்றிப் பார்க்கவெனத் திறல்மன் னவன்பால் விடைபெற்று
வாசம் விட்டெதெ கிப்தின்பல் வளங்கள் புலங்கள் கண்ணுற்ருன். ()

கண்டே நீல நதிக்கரையின் கண்டம் அதனி லிருபாலும்
பண்டே பண்செய் யாதிருந்த பாகன் களையுஞ் சீர்ப்படுத்தித்
தண்டார் கோதி வாற்கோதி தக்கசெந்நெல் சோளமுதல்
மண்டூஉ மாறு விளைவித்து மன்னன் கடமை வாங்கலுற்ருன்.

பரிபூ ரணமா மேழ்வருடம் பலன்தே சத்தில் மிகுந்தி...வும்
புரிகள் தோறு மதனதனின் புறத்து விளைவைக் கடல்தனின்
கரைசேர் மணல்போற் கணக்கிலவாத் திரளாக்கு வித்தான் குவியலு
ந்தான்]
வரைபோ லுயர்ந்த வவைதாமும் வரையில் லாம லிருந்தனவே.(118)

மக்கட்பேறு.

His getting children.

பஞ்ச காலம் வருமுன்னே பயந்தான் யோசேப் பிருமகவை
சஞ்ச லங்கள் அனைத்துந்தன் தந்தை யுடைய வீடனைத்தும்
மிஞ்ச மறக்கத் தேவனருள் விளங்கிற் றென்னும் பொருளமைய
எஞ்சல் இல்லா மூத்தமகற் கிட்டான் மனசே யெனும்பேரே. (119)

இளைப்பை அடைந்த தேசமதிற் கிளைக்கத் தேவ னியற்றினனல்
இளைய குமாரற் கெபிராயீ மென்னும் நாமஞ் சூட்டினனே
களைபொ ருந்து மேழ்வருஷங் கழிந்த தியோசேப் புரைத்தபடி
களைப்பு றச்செய் யேழ்வருஷக் கடும்பஞ் சம்வந் தெய்தியதே. (120)

பஞ்சம்: எகிப்தியருக்குத் தானியம் வழங்கல்.

Famine:—Distributing corn to Egyptians.

வந்த பஞ்சம் அதிகரிக்க வருந்திக் குடிகள் மிகவாடி
நொந்தி ராஜன் றன்முகத்தை நோக்க, அவனு முத்தரவு
தந்தான் வர்த்த னனபாலின் சாரு மென்றே, அவனுந்தான்
பந்த னஞ்செய் களஞ்சியங்கள் திறந்து பகர்ந்தா னவர்கட்கே. (121)

வாரி சூழ்ந்த வுலகமெல்லாம் வானம் வறண்டு போனதினால்
வாரி சுருங்கி வளர்பஞ்சம் வரச் சகல ஊராரும்
வாரி கொள்ள வந்தாரகள் வள்ளல் பிரதி பால் அவனும்
வாரி யளித்தான் சீராக வந்த வந்த பேர்க்கெல்லாம். (122)

யாக்கோபின் புத்திரர் தானியத்துக்காக முதல்விசை எகிப்திற் கேகினது.

**Jacob's sons proceed to Egypt for corn the first time.**

12. வேறு: கான னாட்டினுங் கருப்புமே லிடவும்யாக் கோப்பு
தானி யம்மெகிப் பத்தினே சகலருங் கொள்க
மானமுற்றதன் மக்களை நோக்கியாம் வாளா
வூனு யிர்கழி வுறுதவண் செனுங்கொளு மென்றான். (123)

இன்ன ருரியி னேருமென் றிளைஞனை யனுப்ப
வுன்ன லன்றந்தை, யவனலாற் பதின்மரு மொருங்கே
யன்ன வூர்செலக் கொள்பவ ருடனடர்ந் தியார்க்கு
மன்ன மீந்திடுந் தம்பிகண் டடிதொழு தெழுந்தார். (124)

ஆசை தங்களுச் சோர்வற நிகழ்வதைத் துணிந்து
மாசை காட்டிலன் கடுமுறை யாடினீ ரெவிட
மோசை யாச்சொலு மெனவுணற் கெபிரெனின் றார்ந்தோ
மாசி லேமென, மறுத்துமே மும்முறை மகிபன். (125)

தேச மிந்நனந் திறந்துள தெரிதலின் பொருட்டே
மோச வொற்றரா வீண்டினீர் முடுகினி ரென்னப்,
பாசத் தந்தையின் பன்னிரு குமரரியா மிளையோன்
வாச னின்றன னொருவன்கா ணுமலே மறைந்தான். (126)

ஒற்றர் யாமல முண்மையு ளோம்பசிக் குணவே
பற்ற வந்தன மென்னவும் பார்த்திபப் பிரதி
ஒற்றர் நீரெனு மென்னுளா யுண்மையன் றெனற்கு
மற்றி ளைஞனை வருத்துமா றொருவனை விடுப்பீர். (127)

இளைஞ னிவ்விட மெய்தலின் றேலியா னியம்பு
முளவ ரேயர சாணை, யுஞ் சேடனிங் குறுமவ்
வளவு மிந்நனின் றகல்கிலீ ரதனினே யுமது
களவு மின்மையுங் காணகுவ லெனச் சொலிக் கனன்றே, (128)

மூன்று நாளனை யோரையு முறைச்சிறைப் படுத்தி
யான்ற நாளினு ளுண்டவற் கஞ்சினே னொருவ
னென்ற விச்சிறை யிருக்கவு மேனையோ ரெழுந்து
சான்ற வில்லுளார்க் ககங்கொடு சாருமி னென்றான். (129)

அப்ப டிச்செயப் போகையிற் றங்களு ளுறைவார்
தப்பி லாதுதம் பிக்குச்செய் தீதுசார்ந் தவதனைத்
தப்பில் ரூபனு மிளவற்கின் னுசெய றடுத்தே
னொப்பி னீரிலை யவன்பழி யுறுத்ததே யென்றான். (130)

இப்ப டிப்பகர் வதையினை யோன்றெரி வுற்றா
னப்ப டித்தெரிந் ததைமுனோ ரறிந்தில ரவரோ
டொப்ப வேதுவி பாடிக ளுடனா செய்தே
யப்பு றத்திற்போ யழுதபின் பவரிடை யடைந்தே. (131)

அவர்கண் காணுறச் சிமோனைப் பிணிக்கவு மவர்க
ளிவற லாக்கொணர் சாக்கினிற் றானிய மிடவுங்
கவையி னன்னவர் கோணியு ளவரவர் காசைக்
கவிப்ப வும்வழி யுணவொடுங் கட்டளை செய்தான். (132)

அன்னர் கத்தைமீ தகங்கொளீஇ யகல்கை யினொருவன்
மன்னு தாரியிற் கழுதைக்குக் கவளம்வாய் வழங்கப்
பின்னு சாக்கவிழ் போழ்ததன் வாயினிற் பெயரு
மின்னு தன்பண மீளச்சோ தார்க்குமெய்ப் பித்தான். (133)

அன்ன போழ்தினி னவரவர் கலக்கின ரலறி
யின்ன லின்னவா றீச்சுர னியற்றலே னென்றார்
மன்னு கானனிற் றந்தைபால் வந்தபி னெல்லா
மின்ன வாறுநி கழ்ந்ததென் றியம்புத லுற்றார். (134)

## யாக்கோபின் புத்திரர் திரும்பிவந்து தகப்பனைச் சந்தித்தது.

## They return to their Father in Canaan.

15. தேயத்ததி காரி யெம்மொடு சிரிச்சினந் தேசீ ரிவ்விட
மாயத்துறு வேவு காரரா வந்திரெனப் பேசி னனைபர
நேயத்தொரு தந்தை யீந்திடும் நேர்பன்னிரு மக்க ளோர்வன
பாயத்தொரு காட்டின் மாண்டனன் பாலன்கடை வீட்டி லுற்றனன்.

வேறு:

16. ஒற்ற ரன்றியா மென்று சொற்றன மோங்க ருண்மையுந் தம்முனோர் வனைத்
தெற்ற நடமுறை விட்டு வீட்டுளார் தேறவேயுறுக் கொண்டு செல்லுவீர்
சொற்ற துன்னமைய ருக்க னிட்டனைத் தொக்க வேயமழு நீங்கள் மேவுமி
னற்றைப் பொழ்து நீ ரிந்த நாட்டினி லாரு வீரொனச் சொல்லி, மேலுமே. (136)

இங்கு வைத்திடு சோத ரன்றனை யிவ னும்மிட மிந்த நாட்டினிற்
றங்கி வாணிபஞ் செய்ய லாமெனச் சாற்றி னனெனச் சொல்லி னாரகந்
தங்கு கோணியைக் கொட்ட வேயவர் தங்கள் சாக்கினிற் பணமுடிப்புற
வங்க னொந்தனர் தந்தை தன்னுட னச்ச மாயின ரழுதெழுந்தபின். (137)

வேறு:

2. தாதைதன் மகாரை நோக்கித் தனித்தவ னாக்கு கின்றீர்
காதலன் சூசை போனான் கவின்றிறற் சிமியோ னில்லை
யோதநும் மறுச னைக்கொண் டோடவுமெண்ணை முற்றி
ரீதெலாம் விபத்தாய்ச் சேர விறைசெய லன்றோ வென்ன. (138)

மூத்தசே யுருபனா சேர்ந்து முதிர்தந்தை முன்ன ரோதின்
றேத்தியே சொல்வான் மாற்ற மிளவலை யென்னகை யேற்பீ
னேத்திரம் போற்காத் தன்னை நேர்வனா னெனி லிரண்டென்
கோததிரக் குமரா தமமைக் கொலைபுரிந் தருடியென்றான். (139)

என்னவு மறுத்துத் தாதை யென்மக னும்மோ டேகான்
முன்னவ னிறந்து மீந்தான் முடுகிநீர் செல்லுந் தாரில்
வின்னநே ரிடுகி லென்றன் மெய்நரை யுசைத் தோய்ந்
துன்னியே பாதா ளத்தைத் தொடர்ந்திடச் செய்வீ ரென்றான். (140)

## யாகோப்பின் புத்திரர் தானியத்திற் கிரண்டாம் விசை எகிப்திற்கேகினது.

## They proceed to Egypt the second time for corn.

வேறு:

4. தேசபஞ்சங் கொடிதாகி யெகிப்தினின்று கொணர்ந்தவகஞ் செலவதாக
வாசபிதா மகாரைக்கூ யேகுமினம் வாங்கியகம் வம்மி னென்ன

வோளைசயூ தாவென்மக வுங்களிட்டன் உடன்வரிரே லுமைநோக் கேனென்
றேகினா ருனையொடு மறைந்தனனு லனுப்பிலையே லேகோ மென்றான். (141)

அங்கத்த னிலமொருவ னுளனென்றம் மனிதனுக்கே னறைந்தீரின்றுத்
தங்கச்செய் திலரனன் வக்கேயம் மானிடனுந் தகப்பனின்னந்
தங்கினனோ வின்னுமொரு தம்பியுண்டோ வெனவினவத் தகவே சொற்றோ
முங்களிட்ட னுளனெனவேயினென் றுரைப்பனென்ன வுணர்வுற்றேம் யாமோ வென்றான். (142)

பின்னுமியூ தாதாதை யைநோக்கி யாஞ்சிசுக்கள் பிழைத்தற் காகச்
சின்னவனை யெற்பிறகே விடுவீரே லவற்குத்த ரவாதஞ் செய்வல்
நின்னிடத்தன் னிளையானை யொப்பியேன லதென்றும் நேர மென்மீ
தின்னசம யஞ்செயதிடே விரண்டுதரம் போந்துமீண் டிருப்போமென்றான். (143)

அதற்கத்த னங்ஙனமே லொன்றுசெய்மி னந்தேச வதிசயத்துள்
விதத்திலும் பிசின்தயிலந் தேன்கந்த வர்க்கங்கள் வெள்ளைப் போளம்
மிதத்துள்ள தொபீந்த வாதுமையுஞ் சாக்கிற்கொண் டேகிவேந்தன்
பதத்தினவைமி னுணவிற்கா விரட்டிப்பாய் பணமுமுறீஇப் படர்மின் கோணி. (144)

வாயினே வெளிப்பட்ட வண்பொனையு மீளவிலையும் வழிக்கொண்டேகிப்
போயங்கே யுற்றமறு சோதரனைப் பென்யமினைப் புகழ்நீ லாறு
பாயெகிப்தான் வேரன்பிரதி விடுத்தருளப் பாலிப்பான் சருவ வல்லோ
னுயபின்னை யற்றவனேர் யானிருப்பே னென்னமொழி யறைந்திட்டானே. (145)

### இரண்டாம்விசை திரும்பிப்போய் வர்த்தனனைக் கண்டது.

### Their interview with Joseph the second time.

அப்பொழுது சோதரரவ் வஸ்துவுமி ரட்டிவிலை யுங்கை யராத்
தப்பிறம்பி பெனியமினை யழைத்துப்போ யெகிப்ததியன் றன்பா னிற்க

மெய்ப்பான்ற னருளுற்றோன் றம்பிகண்டுக் கிரானரொடு விளம்பல் செய்வா
னிப்பொழுதிம் மனிதரைந மிற்கொடுபோ யெழிற்புலவ தினிதாக் கூட்டி. (146)

அடிசில் செய்வி நண்பகனம் மோடிவர்க ளமர்ந்தசனஞ் செயவாமென்ன
மடையரெச மானுத்தா ரப்படியே செய்தவரை மாடமுய்ப்பான்
றடமார்பன் மாளிகைக்குக் கொண்டேகத் தளம்பி மனந் தமதுமீது
படர்தரவே கோணியினே முன்னிருந்த பணமிமித்தம் பழிசு மத்தி. (147)

இன்னுநமைச் சிறைசெயூ நங்கரங்க ளேற்குமா விழுத்திட்டார்கொ
லென்றுதமுட் பேசியபி னிலங்குமணி வாயினடி யெழுந்து நின்று
மன்றமுள வீட்டுவிசா ரணைக்கார னைக்கூவி வாழ்க வையா
வன்றியா மசமதற்கா விங்கணண்ணிப் போயினோ மறிவாய் நீ தான்.

ஆற்றினே தங்கிடுகாற் கோணிகளைத் திறந்தபோழ் தவண வன்றுன்
மாற்றுக வழங்கியபொ னவற்றின்வாய் வயங்கலுறும் வகையைக்கண்டி
தாற்றினவன் யாவனென விதுகாறு மறிந்திலமீ டங்கையுள்ளேம்
போற்றியின்னே வேண்டற்கு வேறுபொனுங்கொணர்ந்த மெனப் புகன்றுரன்றே. (148)

புகலவனுேன் சமாதானம் வெருவன்மின் பொன்றிலன்பு புரிபிதாநீர்
புகழுமிறை புதைபொருளாக் கற்பித்தான் சாக்கினுளேபோந்துமுனா.
ளகமதற்கி ாசெனங்கை யமர்ந்த தெனுச் சிமியோனை யவர்பால் விட்டே
வகமவரை யழைத்துக்கா றோயுநீர் கத்தையுணவளித்தா னன்னோர். (150)

தாமவனே யுணவருந்துஞ்செய்தியுறீஇச் சூசைவருஞ் சமயத்துள்ளே
சேமமுடன் கொணர்ந்தகா ணிக்கையவை மதியமட்டுஞ் சித்தஞ் செய்து
தாமபுயன் மாளிகைக்கு வந்தவுட னதைக்கொடுபோய்த் தாளின் வைத்தே
வாமமுற நிலநேரிற் குனிந்து தொழீஇ வணங்கியிக வாழ்த்தலுற்றார். (151)

அவனவர்கள் சுகசெய்தி வினவியபி னீர்சொலிய வளவை மிக்க
திவறுமெந் தந்தையுஞ் சுகமெவனுந் தருகினனோ சாற்று மென்ன
அவர்களினி னடியனவன் சுகஞ்சீவ னுள்ளனென வறைந்திட்டார்கே
சவைநடுவிற் றலைகுனிந்து சாமியென வணங்கினர்கள சாலத்தாளே. (152)

கண்ணேறெ டுத்தத்தன் றாயீன்ற பெனியமீன் கனிட்டற் கண்டு
மண்ணோரு மும்மறச னொருவனுள னென்றதந்த வளனோ வென்று
விண்ணோரு தேவனவருக் கிருபைசெய வென்றுசொலி வெட்பி யுள்
ளங்) கண்ணீரை யுதிர்க்கவிடந் தேடியறை போயவனே கண்ணீர்விட்
டான். (153)

வர்த்தனன் சகோதாருடன் அசனஞ்செய்தல்.
Joseoph dining with his Brothers.

9-வேறு: விட்டபினர்ச் சட்டெனவங் கானனம்வி ளக்கிப்
பொட்டெனவே போந்துவெளி பொங்கலுள டக்கி
வட்டவடை முக்கனிவ கைவகையி னோடு
மிட்டிடவி ருந்துணவு கட்டளை செய்திட்டான். (154)

ஒக்கவமர்ந் தேபிரெய ரோடசன முண்ணல்
மிக்கவெகி பத்தாது வேண்டல்லல வாதாற்
றக்கவனுமோர்நிரைச கோதரு மோர்சார்
தொக்குமெகி பத்தர்பணி வோரொருசார் தொக்கார். (155)

ஆசைமுன ராயமுறை சோதரர்கள் சேரப்
பேசுவய தின்படிமு தல்கடைபி றங்க
வாசறவ மர்த்தினர்கள் பந்தியின தற்கா
லாசையினி னங்கவர்க ளாச்சரிய மானார். (156)

மந்திரியோ சேப்புதன்முன் வைத்திடுமு ணவை
முந்தியவர் பிந்தியவ ரியார்க்கு முறையாகத்
தந்திரிய குத்தவையு டம்பிதனக் கேய்ந்த
வைந்துமடங் குற்ற, மது வானகமகிழ்ந்தார். (157)

பென்யமீன் சாக்கில் வெள்ளிக்கிண்ணி இருந்தது.
Silver cup found in Benjamin's sack

7-வேறு: பிளையவன்ற னிற்பதினைப் பெயர்சொல்லா வழைத்துப்
பிறங்குமக மிவர்சாக்கிற் பெரும்பார மிட்டு

மினுமவன வன்காசை மீளவவர் சாக்குள்
வீழ்த்தியினை யோனதின்வாய் வெண்கிணியும் வீழ்த்தி
தனைவினவ ரூரேகத் தூண்டிடென வேவத்
தோன்றறனக் குறைத்தாங்கு சூரியோதயத்திற்
பனிவெயழமுன் கரமொடெழீஇப் பயணமுறச் செய்தான்
பார்வோனின் மந்திரிதன் பணியுக்கிரானன். (158)

நகரநின்று வெகுதூரம் நடப்பதற்கு முன்னர்
நம்பியைக்கூய்ப் புறப்படுநீ நண்பர்களைத தொடர்ந்து.
தகலவனைப் பிடித்தேநீர் தகுதியோவென் செய்தீர்
தகுதிசெயத் தகாதுசெய்தீர் சாமிபானம் பண்ணுஞ்
செகமறியும் வெள்ளிக்கிண்ணி செலும்வகைதான் ஞான
திருட்டியினூற் றெளிவனிது செவ்வையதோ வென்னுப்
புகவிடுகாதி டிக்கவெனப் புகலுமாறு விரைந்து
போம்வழிம றித்தவனும் புகலவும்ம தற்கே. (159)

ஆண்டவனே யிந்தமொழி யடுக்குமோநீ சொல்ல
வடியவருக் கக்கரும மளவிறூர மாமே
காண்டிமுன்ன ரெஞ்சாக்கிற் கண்டபொருள் காணுங்
கண்ணருந்து கொணர்ந்துதந்தங் கரவிலாது; நின்ற
னுண்டைபொன்னை வெள்ளிதன்னை யபகரியோ மியாங்க
ளடியர்க்குன் யார்மாட்ட கப்படினு மவன்றூட்
பூண்டுகொலை யாகுகநின் பொன்னடிக்கே யாங்கள்
போவந்தொழும பென்னவவர் புகலவன்றேன் மொழி
[வான் (160)

விரதரும தறையாக வெண்கிணிதன் வசமா
விளங்குபவன் றெழும்பாக மீந்தவாபோ மென்னுத்
துரிதமாகத் தத் தங்கோணித் தாமிறக்கித் திறந்து
தோற்றமுன்ன வன்முதலாச் சோதனைசெய் தப்பாத்
திரம்பெனியமீன்கோணி சேர்ந்திருக்கக் கண்டார்
சீலைகிழித் தாரவர்தாஞ் சேர்நதபொதி யேற்றிக்
கரமவற்றைத் திருப்பினர்கள் காவலனுள் புரிக்கே
கலங்கினரா மலங்கினராக் கூடிதிற்சேர்ந் திறுத்தார். (161)

## யூதா பென்யமீனுக்காக வர்த்தனனை வேண்டல்.
## Juda intercedes with joseph for Benjamin.

யூதாவுஞ் சேர்தாரும் யூசனிலஞ் சென்றூர்
யூகத்தவ னதுகாறு மொருழியும் போகான்

போதவவன் முன்பவர்கள் பூவின்மிசை விழநீர்
புரிந்ததென்னை யென்போலும் புருடனுக்குத் தேவன்
ஓதுஞான திருட்டியினு ணோர்தல்தெரி யீரொன்
றுரைக்கயூதா வாண்டவனை வுன்மாட்டென் சொல்வோர்
தோதகமி லாதெங்ஙன் றுலக்குவோமெந் தோத்தே
தோற்றினனின் கிண்ணமுளோன் றுணைவருடன் றெண்டே.

என்றதற்கெகிப்துதுரை யெனக்கதமா தூர
மெவன்வசம்பாத் திரங்கண்ட தெனக்கடிமை யவனே
இன்றுசமா தானத்து மீன்றவன்பா லேகு
மெனயூதா வடுத்தேசார்ந் தன்னிறைவசெவி யேற்பாய்
நன்றொருசொல் லடியனசொல நண்ணற்க கோபம்
நாடாளும் பார்வோனொப்ப நண்ணலுற்ற நீதான்
றுன்றுமுங்கட் கின்றனுண்டோ தோன்றலுண்டோ வென்றாய்
தூயமுதிர் தாதையுளன் றுணைவிழுதி ரவயதே. (163)

பெற்றவிரு மகர்தமிலே பெரியவனோ விறந்தான்
பெட்புடனே யிளையோன்றன் பிதாக்குணற்று ளென்றோம்
அற்றைசமயத்தெனைநீ யழைத்திடவென் கண்ணால்
அவனைநோக்கல் வேண்டுமென்ன அடியர்களுக் குரைத்தாய்
அற்றுவீழ்வன் றுதைதானு மவனைநீக்கி லென்றோம்
அதற்குநீயு மநுசனைத்தா னழைத்துவரா னிசமாய்ப்
பெற்றலினைறென் வதனமெனப் பெருஞ்சபதஞ் செய்தைப்
பெற்றவன்பா லிம்மாற்றம் பெரிதுறவே சொற்றோம், (164)

விருத்ததந்தை விரைந்தெகிப்தின் மேவியகங் கொண்டென்
றுருத்தினையக் குரைத்தவனை யுற்றெதிரி னோக்கி
விருத்திபெறு மனுசனெம்பான் விடுவிரன்றே லேகோந்
திருத்தருமச் செம்மன்முகந் தெரிசிப்ப தின்றே. (165)

என்றபொழு தென்மனையா ளீன்றமக்க ளிருவர்
பொன்றில்புகழ் மூத்தவனைப் புலிகொன்ற தாமோ
வென்றிருப்ப தின்றளவு மேவிலது மறிவீ
ரின்றிளையோ னெனைநீங்கி யேகுழிச்செல் வழியே. (166)

இடையூறொன் றெய்தக்கா லென்னரையைத் துயரி
னடைதருவீர் மண்ணறையென் றறைந்தனனு லின்னே

கடையானை விட்டத்தன் கடையேகிற் ஜீவன்
மிடைந்திருப்ப தவனுயிரின் மின்மணியி னொளிபோல். (167)

ஆதலினா லநுசனில்லென் றறிந்தவு டனுயிரு
மீதலஞ்சென் றிடுமேலோன் மேலுரைத்த படியே
பாதலமன் னுனையைப் பார்க்கவிடஞ் செயவோ
மோதுமறு சற்கியானுத் தரவாதி யுற்றேன். (168)

மேலுமிவ னேநின்புடை மேவுதல்செய் யேனேல்
சாலவுநே ரஸ்தனெனச் சாற்றியுளோ னாக
மாலைநுச னையவன்றன் முற்பிறந்தா ருடனே
ஏலவிடுத் தருடியென விரந்துவேண்டு கின்றேன். (169)

இங்கணேநின் றொண்டாக விருந்திடுவேன் யானே
தங்கிடுவே னின்சமுகந் தம்பிதனின் பதிலா
வங்ஙனம்போய்த் தந்தையரி னானனம்பார்ப் பேனோ
வெங்ஙனமென் றந்தையுறு மிடும்பைகாண்ப லென்றனன. (170)

வேறு:

2. இன்னன பகர்ந்த யூதா விரந்ததைச் சூசை கண்டு
முன்னமே தனக்குந் தங்கண் முதிர்பிதாத் தனக்கு மிக்க
விங்கிலத் தியலா வண்ண மெண்ணியு மொழிந்துஞ் செய்து
பின்னல்க ளநேக மாக விளைத்திட்ட வண்ணன மார்கள். (171)

அன்னவா றிலாதை யற்கு மர்யதன் னநுச னுக்கு
மன்னின ரன்பா லென்றுண் மகிழ்ந்தனன் முன்ன வர்க
டுன்னிய சிந்தை நோகத் துளக்கினேன் சொல்லொண் ணாத
நன்னய நட்புக் காட்டி நவிலுவா னயருவானே. (172)

## வர்த்தனன் சகோதரருக்குத் தன்னை வெளிப்படுத்தல்.

## Joseph Reveals himself to his Brothers.

வேறு:

18. அவ்விடை வர்த்தன னண்மையி லார்ந்திடு மனையோர்முன்
செவ்விதி றன்னைய டக்குத லாற்றிநிஞ் செயலற்றே
யுவ்விடை யுற்றவ ரியாருங்வெ ளிச்செல வுரைசெய்து
தவ்வுறு சோதரர் தற்குவெ ளிப்படத் தனிநின் றுன். (173)

அங்குர லோசையெ ழுப்பிய ழுதெகிப் தியர்கேட்டார்
செங்கர வாள்பிடி மன்மனை யோர்களுஞ் செவியேற்றார்
அங்குச கோதர ரோடவ னெந்தையி னருஞ்சிவனை
றங்கின தோபுவி யின்னுமென் றன்புடன் சாற்றினனே. (174)

ஆண்டுச கோதரர் மூகைய ராகின ரகமாழ்கி
மாண்டகு சூசைய னார்தமை யண்மையின் வழியென்னத்
தூண்டவு மண்ணின ரவர்களை நோக்கித னேவாநீ
ரீண்டெழு வோர்வசம் விற்றநுந் தம்பியான் யோசேப்பே. (175)

ஆதலி னீர்விச னப்பட வேண்டலி ராண்டோனே
யீதல மும்முன ருய்த்தன னென்னையி ரட்சைக்காப்
பூதல் மீர்சமை பஞ்சம்வந் தெய்துள திப்போழ்தி
னீதலா லவரு டம்மினு முழவறுப் பிலையாமால். (176)

பூவினி னும்வழி சம்மொழி யாப்பிட பூவீச
னேவின னிங்கெனை யோர்பெரு மாதர வீதற்கே
நீவிரன் றீச்சுர னாட்டின னிவ்வுழி நீடத்தான்
கோவின தத்தனு மூர்க்கொரு கத்தனு மானேனே. (177)

ஆகவு நீரதி சீக்கிர மென்பிதா வகநண்ணி
யோகனுன் மைந்தனி யோசேப் பேகிப் தாள்கின்றான்
ஏகன தருளின், றன்னிடம் விரைவினி னேகென்றான்
ஆகுநுஞ் சந்ததி யாடுமா டாடுமற் றனைத்தோடே. (178)

சீர்பெறு கோசே னாட்டினின் வாழ்ந்துசி றந்திடுவீர்
பேர்பெறு கோத்திர நல்குர வின்றுறப் பேணிடுவேன்
சார்பெறு பஞ்சமி னும்மை யாயனந் தங்குமென்றே
நேர்பெறு மூன்மக சூசைசொ னானென நிகழ்த்திர்நீர். (179)

உம்மொடு பேசுவ தென்னது நாவென வோர்ந்துளவீர்
நும்முடை நோக்கமு மென்னிளை நோக்கமு நோக்கிற்றே
இம்மணி லெற்குள மாண்மையெ வற்றையு மென்றந்தைச்
செம்மலு ணர்ந்துடன் சீக்கிர மீங்குறச் செய்யும்நீர். (180)

என்றுத னுருயிர்த் தம்பிக ளத்திறு கக்கட்டிக்
கன்றிய மூங்கிட வவ்வுய ரண்ணனு முத்தைத்தான்
நின்றுறு நேயமாக் கட்டியி ரங்கலை நெடிதற்றான்
சென்றுதன் சோதர ரியாரையு மாறுதல் செயுமாறு. (181)

அன்னவர் தம்மைய ணைத்தழுத் தந்தந் தழுவிட்டான்
றன்னவ ரவனொடு சொல்லுரை யாடத் துணிந்தாரே
மன்மனையோர்களும் வர்த்தனன் சோதரர் வரலோர்ந்து
முன்னில பின்னில வென்னம கிழ்க்கடன் மூழ்குற்றார். (182)

பார்வோன் வர்த்தனனுக்குத் தந்தையை வரவழைக்கக்
கட்டளை முதலியது.

**Pharaoh commands Joseph to send for his Father.**

வேறு:

2. அண்ணல்பார் வோன்யோ சேப்பை யழைத்துநீ துணைவரோடும்
எண்ணுறுங் காமேற் பார மேற்றியே கானு னேகிப்
புண்ணிய னுந்தை யிங்கே புகழுறுங் குடும்பத் தோடும்
நண்ணிட வழைத்து வாராய நல்குவ னூட்டி னன்மை. (183)

ஊர்ந்திடச் சகடங் கொண்டுற்ற கொண்டேகி யுந்தை யேற்றிச்
சேர்ந்திடும் பண்டம் பாடி கிரணமு மெண்ணி ரிங்கட்
சார்ந்தநன் னலங்க ளியாவுஞ் சார்ந்தன வும்மை யென்று
தோந்திடச் சொல்வா யெனத் தெரித்திட்டான் றெரித்திட்டானே.

வர்த்தன னிறைவன் சொற்போல் வண்டிகள் வழங்கி மேலும்
அத்தத்து ணானுந் தந்தான னவ்வவர்க் காக மாற்று
வத்திரந் தந்தான் றனறாய் மசற்றுமாற் றுடை யைந்துந்
தத்தமாய் முனூறு வெள்ளி தந்தன னவற்றி னோடும். (185)

அத்தனுக் கென்ன வூரி னரியபண் டங்கள் பத்துக்
கத்தப மீதும் பத்துக் கோளிகைக் கழுதை மேலே
அத்தத்திற் குணவாத் தந்தைக் கப்பமுந் தானி யாதி
வித்தக னேற்றிக் கானுன் மேவுமி னென்றான் மாதோ. (186)

ஏகிடும் போழ்திற் றாரி னெனக்குநீர் மேனாட் செய்த
மாகொடுஞ் செயல்கண் மற்றும் வழியுறு வதனை மற்றுஞ்
சீர்கொடை யென்பாற் பெற்ற வெதையெனும் பற்றி யும்முள்
யாகடு முறையாற் றிரொன றன்புளான் சொலிவிடுத்தான். (187)

சகோதரர் வழியிற் செய்திருக்கத்தக்க சம்பாஷணை.

**Probable conversation of the Brothers on the way.**

5. வேறு: விடுத்த செம்மலின் மேல்விழுந் தேங்கினார்
எடுத்தெ டுத்தவ னன்பதை யேத்தினார்

விடுத்த னரவன் மேன்மணி மண்டபம்
அடுத்த னர்அரண் மாநகர் வாயிலே. (188)

தொடுத்த னர்வழி சற்றுத்தொ லையவுங்
கடுத்த சேவகர் முன்னெமைக் கண்டுநீர்
எடுத்த னன்றதோ வெம்மன்மா வெண்கிணி
படுத்த லாற்றினிர் பார்த்தில னன்றியே. (189)

சுமையி றக்கிடுஞ் சோதனை காட்டுமென்
றெமைவ ருத்தயாங் கோணியைக் காட்டின
வமயம் தம்பியின் கோணிதன் வாயினின
றிமைத்த திவ்விட மிவ்விட மென்றனர். (190)

நின்று பேசினர் நிர்மல னம்பியைத்
தன்க ணூன்றிடச் செய்தத கைமையாம்
நன்று செய்யவே நண்ணினன் பண்ணினன்
என்றுள் கூர்ந்தவண் விட்டுமே யேகினார். (191)

ஏகிச் சிற்றின மாமுனே திர்ந்தனர்
ஏகிப் பத்தின கமுன மேற்றகால்
வாகு றத்தரு வண்பொனுங் கோணியுள்
ஆகக் கண்டுதுன் புற்றம டத்தையே. (192)

எதிர்ப்ப டம்மடந் தங்குதற் கேற்றதா
விதிர்ப்பு முன்னுள் வில்லராய் மேவினர்
நிதிப்பொ திகொள்க ரந்தேர் நிறுத்தினார்
கதிர்ப்போழ் தாமள வுங்கண்ணு றங்கினார். (193)

குன்று பள்ளங்கள் கோணனேர் பாதைகள்
துன்றுங் காடுகள் சோலைகள் கானல்கள்
ஒன்றுங் குன்றம லல்வெளி யோடைக
ளென்று போகுமென் றெண்ணமிட் டேகியே. (194)

சகோதரர் தம்பி உயிரோ டிருப்பதைத் தந்தைக் கறிவித்தல்.

Brothers informing Jacob of his son being alive.

வந்து சேர்ந்தனர் மன்னுகா ஞனின்கண்
மைந்தர், தந்தையான் மன்னவ கேட்டிடாய்

நந்தஞ் சேடனி யோசேப்பு நந்திலான்
விந்தை நாட்டதி காரிவி ளங்கினான். (195)

என்று சொல்லவு மீசிர வேலங்கு
அன்று மூர்ச்சையின் சோர்ந்தன னம்பிலான்
அன்று பொன்றின னின்றுவ ருவன்கொல்
என்றி யம்பின னென்னசொ லீதென்றான். (196)

ஆண்டு சோதரன் சொன்மொழி யாவையும்
ஈண்டி மைந்தரி சைக்கவி டயங்கள்
பூண்ட பண்டிபண் டங்கட னக்கெனக்
காண்ட லாலுயிர் கண்டகம் பூத்தனன். (197)

காத லன்னென்றன் கண்மணி பூவுறப்
போது மென்றனன் பொன்றுமுன் போகுவன்
மோதி யின்னேய வன்முகங் காண்குவன்
மாத யாபரன் வண்மையி னென்றனன். (198)

## இஸ்ரவேல் எகிப்து தேசத்திற்கு வர்த்தனனண்டை சென்றது.

## Israel (Jacob) going to Joseph in Egypet.

வேறு:

11. என்றிஸ் ராவெலன் றுள்ள யாவுமெ டுத்துப் பேர்செபா வேகியே
தன்ற கப்பனீ சாக்கின் றேவினோர் தக்க வோர்பலி யிட்டன
னன்றி ராவினி னனையன் காட்சிய ளித்தி யாக்கொபு யாக்கொபு
வென்று கூபபிட வடிய னிங்குளே னென்ன வங்கனிறைவனும். (199)

நானின் றேவனு னின்றன் றந்தைதே னண்ண லட்சமெ கிப்தின்கண்
டான வடந்திட, நினனை யவ்வுழி தக்க சந்ததி யாக்குவேன்
நானின் றேடவ னொரு வேனவ னின்று நான்வரப் பண்ணுவேன்
ளுனமுற்றவர்த் தலைன்றன் கையினூற் றன்கண் மூடுவனென்றனன்.

ஆய பினனரியாக யோசேப்பு பேர்செபா நீங்கி யப்டறப் பட்டன
னேய மைந்தர்தந் தங்கைத மக்களை நெடுங்கட்பெண்டிரைப் பாரவோன்
சாய வுயத்திரந் தேர்க ளேற்றியே தங்க ளாடுமா டங்களே
மேய சம்பதம் யாவி னோடுமே வெளிப்பட்டார்களெ கிப்திற்கே. ()

இந்த வண்ணமன் றிசா வேனு டனெழுந்த பேரொணெட் டிரண்டுமே
மைந்தர் தம்மனை தவிர வுஞ்சார் மாக்கள் புத்திரர் பௌத்திரர்
விந்தை வர்த்தன னுமம னைவியு மேய மக்களி ரண்டொடும்
நந்த லில்லெகிப் பத்தி னண்ணின நார்க ளெழ்பது மாயினர். (202)

## யாக்கோபும் வர்த்தனனும் சகோதரரும் சந்தித்தல்.

## Meeting of Jacob, Joseph and Brothers.

வேறு:

19 கோசே னூட்டி றன்னைமெல் குலவு ஜூசை யெதிர்கொள
வாசை யோடு பிஸரவே லடல்யூ தாவை முன்விடத்
தேசு பெற்ற ஜூலசதான் றேறி லேறி யண்ணிநற்
பூசை செயதன் றந்தைமென் புயஞ்சேர் வண்ண மரிதலோ. (203)

கண்ட போழ்து சுந்தரங்கட்டிக் கொண்டு கதறிவாய்
விண்டி லன்ம கிழ்ச்சியான் வெகுபொ ழுத ழுதனன்
வண்ட வைவ யோதிபன் வாழுஞ் ஜூலச நோக்கிநிற்
கண்ட தெற்றுப் போதுமாற் காண்பென் சாவின் னையென்றனன். ()

பின்பு ஜூசை சோதரர் பெற்றோன் மற்று நோக்கிவாழ்
மனபார வோன்பா னும்முடைய வரவைச் சொல்லி நீவிர்தாம்
நன்ப சுக்க ளாடுக ளூடி மேய்ப்பி ரெவருமே
யின்பொருள்க ளெவற்றெறி மீங்க டைந்திரென்பன்யான். (205)

அனைய னும்மை யழைத்துநீ ராற்று செய்கையாதெனி
னினைய வெம்பி திர்கள்பேசு ளேற்று ளேமன் றிசைப்பினிவ்
வினையெ கிப்தி யாருக்கோ ரீன வினையால் சேற்றினிற்
சினைவ ரால்கள் பாய்தருஞ் செழிய கோசெ னீவனே. (206)

## தந்தை முதலியோர் வரவை வர்த்தனன் பார்வோனுக் கறிவித்தல்.

## Joseph reports the arrival of Father and Brothers to Pharoah.

14. ஜூசை பார்வோன பாலேகித் துணைவர் தந்தை மாடாடோ
டேசில் பொருள்க்ள பலவோடெ ழுந்தார் நினபா லெகிப்திங்கண்
கோசே னூட்டிற முன்றொன்று கூறித் துணைவ ரைவர்தமை
யாசி னிறுவ் வவன்முனை ராற்றுந் தொழில்யா தெனக்கேட்டான்.

அடிய ரடியர் பிதாக்களைப்போ லடை மந் தைகளைக் காப்போரா
மிடிமை செய்யுங் கொடியபஞ்ச மேலிட் டதனுன் மேய்ச்சலின்றிப்
படர்ந்தே மிநதே யத்தினைகண் பசிய கோசே னுட்டினையாம்
படியு மாறு தயையருளென் றிரந்து பணிந்து வேண் டினரே. (208)

அதற்கு மன்னன் யோசேப்பை யனபா னேக்கி நின்பாலே
யிதத்தி னிருக்கு மிந்நாட்டி னேர்மிக் குற்ற நற்பதியில்
வதிப்பி நினது துணைவர்தந்தை வளஞ்சேர் கோசேன பதியுறலாம்
பதிப்பா யவருட் டிறமுளரென பசுவா திகண்மேற் பார்க்கவேனுமுன்.

## யாக்கோபு அரசனைக் காணல்.

## Jacob's intervieu with the King.

அதன்பின் சூசை தந்தைதனை யழைத்து வந்து மன்முனே
யிதமா யிறுத்த விவனுந்தா னிறையை யாசீர் வதித்தபின்னர்
சிதமார் நோக்கி னவனுக்குச் சென்ற வாயு ளெனனென்ன
மிதமா யுலகப் பிரயாண மேய நூற்று முப்பானும். (210)

என்று முண்ணு ளற்பமுமா யிருஞ்சஞ் சலங்க ளுற்றவுமா
முன்னுட் பிதாக்க ளனளுளை முடுகிற் றிலவாஞ் சீரெகிப்தாண்
மன்னு வாழ்க வென்றவற்கு வளரா சிகடான் மிகக்கூறி
யின்று விலனற னிருஞ்சபைநின் லெழுந்தான் மகிழ்ந்து முனிவனுமே.

படியிற் பெரிய மன்னனுைப் படியே துணைவர் தந்தைமுதல்
குடியே றற்குப் பலவளமுங் குலவு ரமசேஸ் நாடளிதது
படியின படியவ் வவர்குடும்ப பாரந் தாங்கிக் களைகணுய்ப்
படிய ளந்தான் பாதுசெய்தான் பண்பின் மிக்க வியோசேப்பே. (212)

## பஞ்சம்.

## The Famine.

பஞ்ச மிருந்து கொடிதாகிப் பாலுந் தேனும் பொழிகானு
னெஞ்ச லிலதா மெகிப்தினல மெய்த்தங் குணவொன் றிலையாக
விஞ்சக் கொள்வோர் தனத்தையெலாம் வாங்கி வேந்தன் மாளிகையுண்
மிஞ்சச் சூசை சேர்த்தனனுண் மெலிந்த நலிந்த விருநாடே. (213)

இருநாட் டோரு மசம்வாங்கி யிருநத பொன்னெல் லாமிழந்தே
வரும்ப சியினுற சூசையிட மணுகி யெகிப்த ரத்தமெம்பாற்

றாவொன் றில்லை யன்னமிதின் சரண சரணந் தாதாவென்
றிரந்த டைந்தோம் நினசமுக மிறமே யுயிரோ யெனவாங்கே. (214)

நும்மாட் டிலையேற் காசதுதா னும்மா டாடு களைக்கொடுமின்
சுமமா தானி யங்கடோ னென்னத் தொகையில் காலிகளைத்
தமமா னிடமே தந்தனர்க டம்மா டாடு பரிகரக்க
ளெம்மா னிலையேற் றுருயிரை யெண்ணிப் பேணல் செய்தனனே.

அவவாண் டாகி யடியவொம்பா லத்த மாடா டியாதுமிலை
யிவ்வாண் டைய வெமுடன்மண் ணின்றி யினொருன் றிறையறிவா
யிவ்வீண் டைமையே நிலங்களையே யேற்றே யெங்கட் ககமருள் வாய்ச்
செவ்லாண் டையரா யிருந்துநிலஞ் செய்வோம விதைகடரினெனரூர்.

அதுபோ லெகிப்தர் தங்கடங்க ளரிய பழனம் விற்றனர்கள்
மதுசார் பொழிலா லெகிப்துள்ள வயல்க ளனைத்துங் சோனுரிமை
வதியுங் குடிகளெவ்வெவையு மாறி யவ்வப் புரிகளுற
மதிவர்த் தனனுஞ் செயதிட்டான் வாழ்வாங் கவரும் வாழ்ந்திட்டார்.

கோனங் காசா ரியர்தமக்குக் கொடையா நல்கு நிலங்களவை
யினவ் வரவா லவர்குடும்ப மிருந்து பிழைக்க வென்றவற்றை
மானமுறுமவ வர்த்த னன்றுன் வாங்கான விலைக்கு, வாழ்ந்தாங்கு
தானமுறுதன் குடிநோக்கித் தந்தி ரும்மை யுமநிலமே. (218)

இன்று நும்மை நும்நிலத்தை யிறையோன் றனக்காக் கொள்ளுற்றே
னன்று விதைத்தா னியந்தந்தே னுடி நிலத்தி னதைவிதைமின்
றுன்றும் பயனி லைந்திலொன்று தோன்ற றனக்கா விறைசெலுத்தும்
நின்ற பாகம் விதையாகும் நீரும் குடும்ப முணற்காமே. (219)

என்ற பொழுதே மாவியைநீ யிரட்சித் தய்யா மிறைவனுக்கே
என்றுந் தொழும்பே யெமதுமீ தேயுங் கருணை யுய்ப்பையென்றூர்
ஒன்றுங் கோற்கைகந் துளொன்றென்றே வுயர்யோ சேப்பன் றிட்ட
சட்டந்
தொன்று தொட்டிம் மாநிலத்திற் றொடர்ந்தின் னாளு நிற்குமன்றே.220

வேறு:

20. ஈசிர வேலரெ கிப்திடை கோசெனி லீண்டியி ருந்தவணே
வாசினி லங்களை யாண்டுப லத்தன ராகினா சந்ததிதே
தாசனி யாக்கொபு நாடுப னேழ்சமை தானுற வாவசித்து
மாசில னுயுல குற்றது நூற்றுநாற் பத்தெழு வற்சரமே: (221)

ஈசிச வேறன் றியாக்கையொ ழித்திடு காலம்வந் தெய்தியதா
லாசையி னூற்றிற் குசைமை யன்னடைய மெழுத்தெனின மீகினது
நேசமு முண்மையு கின்றன கத்தினி னிற்குமெ னினெனனு
பாசவு டற்றனை யின்பன டைகலை பக்குவ மாசகொங்கிபோய். (222)

பூசனை யெந்திரு நாடதி னெண்பிதிர் பொன்றினர் தம்நகி
னூசன மின்றிலை யாயவ ரேம்பிற நாடின னெனனவுமே
வாசனை வர்த்தன னங்ஙன மாமென வானை வழங்கின ணு
லீசிர வேறலை மாட்டிற னங்கமி றைவனி னறஞ்சினன்ன. (223)

## தந்தை சாவுக்குச் சமீபமானதாய் வர்த்தனனுக்கு அறிவித்தல்.

## Reporting to Joseph his Father being near to death.

12. வேறு: பின்னர் தந்தைவ ருத்தமுற் றுளனைப் பேச
மனனு றாதவன் வர்த்தனன் பாலெழீஇ வரவு
முன்ன வன்றனு திர்சுதர் மனுசெவப் ராமைப்
பின்னு றக்கொடு போயினன் பிதாவிடமன்றே. (224)

நின்னெ ழின்மக னீடின னெனுமுரை நெடியோன்
றன்ன லஞ்செவி யேறலுந் தனைத்திடப் படுத்தி
வன்ன மஞ்சமீ தெழுந்துளக் கார்ந்தனன் மகனோ
டின்ன பன்மொழி யிசைவுட னிசைதர லுற்றான். (225)

சருவ வல்லதே கானனின் லூஸெனச் சாற்றும்
புரியி னெற்கொரு தரிசனை புரிந்தெனை யனுகிப்
பரிவி னுசிலை பகர்ந்தனை பலுகவே பண்ணித்
தரையி னிற்பல சனகுழு வாகவுஞ் செய்வேன (226)

நினைக்குப் பின்னெழுஞ் சந்ததிக் கிந்தநி ணிலத்தைத்
தனக்கெ னச்சதரச் சொந்தமாத் தந்தன னென்றான்
உனக்கெ கிப்தினில் யான்வரு வதன்முனே யுதித்த
மனக்கு வந்திரன் மகவீர் வருமெனின் மக்கள். (227)

என்று மாரரூ பன்சிமி யோனையே யெய்வார்
நினைபு றத்தினி நீபெறு புதல்வர்க ணினவா
மின்புற் றேயவ ரவர்முன்னோர் பெயரவை யேற்றே
துன்பி லாதவர் சுதந்தரந் தொகுப்பவர்: யானே. (223)

பாதனி னின்றுகா னுன்பதிக் கேகுறு பதனை
யதர்வ பெத்துல கேமெனு மெபிரொத்தா வணித்தாய்
விதானி னின்னை யிராகெல்சா மேவினா ளவளை
யிதாகி தத்தொடு மிடைவழி யடக்கினே னென்றான். (229)

## யாக்கோபு வர்த்தனன் குமாரரை ஆசீர்வதித்தல்.

## Jacob blessing Joseph's sons.

வேறு:

2. யாக்கொபி யோசேப் பின்பின னெழுமிள மக்க டம்மை
நோக்கலு மிவர்யா ரென்ன நுவன்றனன் றந்தை நோக்கி
யாக்கமா யிங்கண் டேவ னருளிய குமாரரென்ன
மீக்கொளக் கொடுவா வென்றான் வேண்டியா சிசைகூ றற்கே. (230)

வார்த்தக னுன வின்றோ னேத்திர மங்கன் மேவி
தாத்திரிப் பொருள்க ளியாவும் பார்த்திடுந் தகைமை யின்றாற்
கோத்திரப் புதல்வன் றன்சீர் குலாமக ரிணையன் பாகர்ச்
சேர்த்திட, வணைத்தான் சேயர் செவ்விதழ் முத்தஞ் செய்தே. (231)

பின்னர்தன் சேயை நோக்கிப் பின்னுனைக் காண்ப லென்ன
வுன்னில னுன்றோ டிப்போ துன்றுசந் ததியுங் காணத்
தன்னிக ரிலான்செய் தானென னத்தனு ணிமகாரைப்
பின்னிடச் செய்தன னுன்முன பணிந்தனன் பெரிது தாழ்ந்தே. ()

பின்மனு சேஎப் ராயிம் பெயர்முதி யிளையோ ராங்கு
தன்பிதா வலமி டத்திற் றனதிட வல்க்கை கொண்டு
முன்புறச் செய்யத் தந்தை முதியன்மீ திடக்கை வைத்துப்
பின்றலை மீவ லக்கை பேணியா சிர்வ திதே. (233)

என்பிதி ரபிர காமு மீசக்கு மிறைஞ்சு தேவ
னென்சன னந்தொட் டென்னை யேந்திய வெனது தேவ
னென்றனை யின்ன வியாது மெய்துறுக் காத்த நாத
னின்பிறு னியிங் கின்ற விளைஞர்மீ தருள்கூ ராரே. (234)

என்னது நாம மென்ற னின்றொரா பிரகா மீசாக்
கென்னவர் நாம மேற்றே யிகத்திவர் பெருக வென்று
னென்லவும் வலக்கை யெப்பி ராஞ்சிர மிருத்தல் கண்ணுற்
றன்னது பிரியமின்று லதைமனு சேயா னுப்ததே. (235)

அப்பனே யவ்வாறல்ல வவனல்லன் மூத்தவன்றன்
றப்பிதஞ் செய்தா யென்னத் தந்தையோ மறுத்தென் சேயா
வெப்படிச் செயனன் றென்றே யெற்குநீ யுணர்த்தல் வேண்டே
ணிப்படி யிவனும் பல்கி யெழும்புவா னிவனின் மிக்க. (236)

எழும்புவா னெப்பி ராயீ மீண்டிடு மவன்வித் தென்ன
மொழிபுரிந் தவரை யன்று வாழ்த்தியே முடிந்த பின்னர்
செழும்புன லோடுங் கானான் றேயத்தன் பெயர்முனை வைத்தே
விழுமிய எப்பி ராயீம் மனசெயின் மேலையாக. (237)

வானவ னுனி யென்றும் வர்த்தனை யடைந்து வாழ்கென்
றனவ னெவனும் வாழ்கக் கூறுவ ராசி யென்னத்
தானவ னுரைத்து மூத்தோன றனத்தி னெப்பிரா யீமை
மானவன் மனசே முன்னா வைத்தவர்த் தன்னைக் கூவி. (238)

வர்த்தனனுக்கு அதிக சுதந்தரம் கிடைத்தல்.

Joseph obtaining greater inheritance.

9. வேறு: ஆவியென தாக்கையத் தன்றிங்கா லண்மை
சீவியரு மோடுறுவன் றேவனவ னென்றும்
நீவிரெவ ரும்முமது தாதைபதி நீட
லாவிரவ னைமொரியர் கையினுறி யானே. (239)
வாளதினென் வில்லதினின் வாங்கியநி லத்தைக்
காணேயுனக் கானசனை காண்டுக டந்தெண
ணுளதுந டந்தபினர் நலகினனி னக்கே
தேசளதனி னெம்மைநீசு மந்ததிறு லென்றான். (240)

யாக்கோபு தன் குமாரருக்குக் கடைசி வாக்களித்தது.

Jacob's last words to his sons.

6. வேறு: யாக்கொபு பன்னிர் மகர்தமை விளித்து
யாக்கொபின் குமாரரே கேளுங்
தாக்கியே கடைநா ளுங்களுக் கெய்துந்
தகைமையைச் சாற்றுவே னென்று
வாக்குகள் வழங்கி ரூபனே நீயென்
சேட்டமா மகவென்றன் வலிமை
மீக்கொளு நீர்போற் றளம்பியென் மஞ்ச
மேவினை மேன்மையு றாயே. (241)

ஓரனை யுதரச் சிமியோனி லேவி
யோங்குவாள் கொடுமைசெய் கருவி
ஆருமெ னான்மா வவர்கள்யோ சனைக்கே
யமைந்திலா தென்றனின் மேன்மை
சேருறு தவரை யேனெனி னவர்தாஞ்
சினத்தினோர் புருடனைக் கொன்று
மாரினுட் பொங்குங் கதத்தினி னரண்கள
யழித்தனர் வளங்கெட மாதோ. (242)

அரைதுக் கிரமாங் கோவமு மவர்த
மகந்தையு மவமதி மேவ
அவரியாக் கோபிற் பிரியவில் லேவி
லநாதர மாகவுஞ் செய்வேன்
சிவம்பெறு யூதா நின்றனை யோர்தாஞ்
சேர்ந்தனைத் தொழுதுமே புகழ்வார்
புவனசத் துருக்கட் பிடரிமீ துன்கை
பூண்டிடு மரணியத் துறையாப். (243)

பாலசிங் கம்நீ யிரைகவர்ந் தெழுந்தாய்
படுத்தனை கிழவரி யொப்ப
வெல்பவ னெவனே யினையெழுப் பிடவாங்
கிலங்கிடுஞ் சாமமார் பிரபு
தாலமே வுதிக்கும் வரைச்செங்கோல் யூதா
தன்னினீங் குவதிலை யன்னோன்
கால்களை விட்டே நியாயப்பிர மாணன்
கடப்பதில சனமவற் சேரும். (244)

கோத்திரிச் செடிக்கட் கத்தப வினத்துக்
குட்டிகள் கட்டிவைத் திடுவான
கோத்திரிச் சிவப்பி ரசத்தினிற் றோய்ப்பன்
கோடிவத் திரமங்கி யவற்றை
நேத்திரியாம் விழிக டிராட்சமா மதுவாற்
செந்நிறம் விளங்குத லாகும்
காத்திர தந்த பந்திக ளமுதாற்
கான்றிடு வெண்மையு மாங்கே. (245)

திரைத்தெழுந் தெண்ணீ ரலைகொளுஞ் சேர்ப்பின்
சேபுலோன் வசித்திடு மவனே

மரக்கலம் வைகுங் கடற்றுறை யமர்வான்
வாய்க்குமெல் லைசிதோன் வளாக்கும்:
பருத்திரு பொதியி னடுவினிற் படுக்கும்
பலத்தவோர் கழுதைநேர் இசக்கார்
இருக்கநா டிசைந்த திளைப்பற நன்றென்
றேற்பன்றோட் சுமை, திறை தருவான். (246)

தாண்இஸ்ர வேலின் கோத்திரத் தோங்கிந்
தன்சனம் விசாரிப்பானீத
மேனூறுங் குதிரை யேறுவோன் மலாந்தே
யிரிந்திட வதன்குதிங் காலைப்
பூணுறீஇக் கடிக்கப் புகிவழி காக்கும்
புபங்கமே போலுவன், மேலுஞ்
சேணுறும் பதவை யோரமாக் கிடக்குந்
திசுடரா விரியனே நிகர்வான். (247)

காத்தின்மேற் சேறு சமுத்திரம் பாயுங்
காய்ந்திவன் பாய்ந்திடு மதன்மேற்:
பாத்தர சர்கட் கறுசுவை வருக்கம்
பகருவான் ஆசெரு கோது
நீத்தன கொழுமை யவனுண வாகும்:
நீள்செவிக் கழுதென மதுரஞ்
சேர்த்த நல் வசனம் நபுதலி செப்பும்,
திரிதரும் பிணையினைப் பொருவும். (248)

சூசையோ நீரூற் றண்டையிற் கனியார்
செடியது சுவர்மிசை படரும்,
நீசவில் வீரர் நினைத்துயர்ப் படுத்தி
நின்மிசை யெய்திகல் செய்துந்
தேசுறு நின்விற் றிடத்தது நின்றோ
டிறத்தன வியாக்கோபின் றேவா
னேசவிஸ் ராவேல் மேய்ப்பனாய் மலையா
நீடினைத் தேவனு லாங்கே. (249)

சருவவல் லவனு லங்ஙன மாயிற்
றவனுன்றன் சார்பினி லிருப்பான்

பரமதி னன்மை யுன்னதத் திருந்தும்
  பாதல நன்மைகீ ழிருந்துங்
கருப்பங்க டனக்கட் குரியநன் மைகளுங்
  கனக்கவே யுனக்கவ னளிப்பா
னரியவென் னன்மையு மவனலா தில்லை
  யவன்றனு னீயிவா றுயர்ந்தாய். (250)

உன்னதப் பரம னூழியு மறவா
  வுன்றந்தை யாசிடைதாமே
யென்னரும் பிதாக்க ளின்புறத் தந்த
  ஆசிக டம்மினு மேலாம்
மன்னுபர் வதங்க ளந்தமட் டெட்டும்
  மல்கிச்சு சைச்சிர மேனுந்
துன்னுசோ தரரின் மிக்கவ னுச்சந்
  தலையினுந் துலங்குவ தாக. (251)

பெனியமீன் கோரநாய் மாலையி னிரையைப்
  பீறுவன் பின்னுவன் மாலைத்
தனியனுய்க் கொள்ளான் கொள்ளையைப் பகிர்ந்து
  தன்னினங் கட்கெலாந் தருவான்
இனையவாக் குற்றோ ரிஸரவே லருளு
  மீரறு கோத்திர ராவர்
இனையரின் பிதாவிவ் வாசிக ளியம்பிப்
  பின்னவர் நோக்கியே யிசைப்பான். (252)

யாக்கோபு தன்னைச் சேமிக்க வகைசொல்லல்

Jacob's instructions regarding his burial.

வேறு:

14. நானென் பிதிரா நணுகுற்றேன் ஞாலத் தென்னுட் கழிந்தபினர்
கானன் றேச வேத்தியனின் காணி தன்னுட் குகைதனிலே
தானஞ் சேரச் செலுத்துமெனைத் தக்க மமிரேய்க் கெதிராக
மானமக்பே லாவெனும்பேர் வழங்கு நிலக்கண் ணிருப்பததே. (253)

அதுநஞ் சொந்த மாம்பொருட்டே யவ்பொற் கேற்று னபிரகா
மதனைச்சேர்ந்த நிலத்தோடே யரியவெபிரோ னங்கையில்,

அதினு பிரகாந் தாதைதனை யன்றோன் மனையாள் சாராளையும்
பற்றி யீசாக்கை ரெபக்காளைப் பதித்தார் பரிவின் முன்னோரே. (254)

யானும் புதைத்தேன் லேயாளை யத்தக் குகைதா னிலத்துடனே
தானமுற்ற ஏத்தியர்கைத் தானந் தனமிட் டட்டினதாங்
தானிவ்வாறு மொழிந்த தற்பின றங்கான் மடக்கிக் கட்டிலின்மேன்
மானனீத்தா னுருயிரை மன்னும் பிதிரோ டேமறைந்தான். (255)

யாக்கோபின் மரணத்தின் பேரிற் புலம்பல்.

Lomentation over Jacob's death.

வேறு:

21-அப்போழ்தினின் யோசேப்புத னப்பனமுகம் வீழ்ந்தென்
னப்பாவென தப்பாவென வளித்தேமுத்தம் முகத்தின்
இப்பாரது மெப்பாரது மிளகும்படியிரங்கி
யொப்பாரிது ணேவோருடன் செப்பித்துய ருற்றான். (256)

மறந்தாயிக மறந்தாயெமை மறந்தாய்மனை மக்கள்
துறந்தாயுடற் கைகால்களைச் சுவையார்மொழி விழியைச்
சிறந்தாய்த்திவி யப்பேறுக டேர்ந்தாய்முத்தி வழியைப்
பறந்தாயநத வழியேயுயர் பரனூர்டம் வாழ்வான. (257)

உய்யத்தகு முபதேசம் துணைத்தாயெமக் கியாங்கள்
செய்யத்தகு மாற்றின்னெமைச் செலுத்தத்தின முயன்று
ய்யாவென மெய்யாவெமக் காரயுள ளையா
வையத்தெமைப பேற்றேமிக வளர்த்தாயெமை வாழ்க. (258)

பன்னீர்மா பிற்கோரொப்பிற் பதியேயென வுயர்ந்தாய்
முன்னேனுனா தவறுதிவண் மொழிந்தாயெமை யொழிந்தாய்
நன்னீர்மையி னுதன்பணி நாடஇப்பதந் தேடஇப்
பின்னோர்க்கொர் பிதாவாய்மகம் பிறங்குற்றனை நீயே. (259)

முன்னுடனின் முன்னோருடன் முழிராவினும் மாகக்
கொன்னேதரு மமராடினைக் கொண்டாய்ச்சய மாங்கே
மனனென்பொரு டருமீசிர வேலென்பெயர் வாய்ந்தா
யென்னுளினி யெவரேநினைக் கிணையாப்பொரு வாரே. (260)

அன்னை இரெபக் காளைநினை யம்மானிடம் பொகச்
சொன்னுளைப்பின் காணுதநின் றுயருற்றவட்காண

வுன்னிஇயவன் முன்னோர்தமை யுன்னிஇயெமை நீங்கிப்
பொன்னேயொளி ருலகத்தினிற் போகும்வித மிதுவோ. (261)

மக்களனை வொர்க்கும்மவர் மன்னும்முறை நவரு
தொக்கும்பல வாக்கேதக வுரைத்தாய் நின துடலைப்
பிற்காலதிற் பிதிரோடுறப் பேணும்வகை கூறி
இக்காலமு மெக்காலமு மேங்கும்படி செய்தாய். (262)

யாக்கோபின் உடலைக் கானனிற் கொண்டுபோய்ச் சேமிக்க
வர்த்தனன் விடைபெறல்.

Joseph taking leave to carry his Father's remains to bury in
Canan.

வேறு :

12-சகந்து றந்ததன் றுதையின் சடலத்தைப் பேணிச்
சுகந்த வர்க்கமிட் டிடத்தன தாரியர்த் தூண்ட
வகந்த னின்னுற் பதுதின மளவில் திமிர்ந்தே
யிகந்த னிற்றுயர் கொண்டன ரெழுபது தினமே (263)

இதன்பின் குசைதா னிறைவனி னினத்தனை நோக்கிச்
சுதனென் றென்னையே தாதைதான் றுஞ்சும்போ தழைத்துப்
பிதிர்கண் முந்துறுங் கானனிற் றனதுடற் பேண
விதமதாகவெட் டியசமா தியிலிடென் றிசைத்தே. (264)

என்னி டத்தினி னுணைகொண் டனனென வியம்பி
மன்னி டத்தினி னன்னவா றியான்சென்று வாற்காத்
தனனி டத்துறு தயைசெய்து விடைபெறி இத்தருகச்
சொன்னசொற்படி தோன்றலும் போய்வரச் சொற்றுன். (265)

யாக்கோபைச் சேமித்தல்.

The Burial of Jacob's remains.

வேறு :

14-அன்ன படியோ சேப்புத்த னையற் கடக்க வெழுந்தனனுன்
மன்னன் பார்வோ மாளிகையின் மன்னுமுத்தி யோகர்களுன்
கன்னல் விளையு மெகிப்துள்ள கனவான் றனவா லனைவொரு
மின்ன லடைந்த துணைவோரு மீண்றே னினமு மெழுந்தாரே. ()

மந்தை சிசுக்கண் மாத்திரமே வளர் கோசேனிற் றங்கவிட்டார்
உந்து மிரதம் பரிவீர ரொக்கப் போகப் பரிவாரம்
நந்தி யிருந்த நதியோர்தா னண்ண் ஆதாத் தமர்க்களத்தின்
வந்தபொழுது வெம்பினர்கள் வளரொப் பாரி சொல்லலுற்றார். ()

அந்த தங்கி யெழுபதுநா ளையற் கயர்ந்தார் பெருந்துயரந்
தங்குங்கானு னியக்குடிக டங்கண் ணுதாத் தமர்க்களத்திற்
பொங்கும் புலம்பல் கண்டஃதே பொதுவாந் துக்க மெகிப்தினென்று
வங்கட் காபேல் மிஸ்ராயீ மாசப் பெயரன் றிட்டார்கள். (268)

இஸரா வேலின் குமாரர்தங்கட் கிடுங்கட் டளைப்ப டிக்கானன்
றிசையே வனனே னுடலதனைச் சிறக்க மம்ரேய்க் கெதிருள்ள
விசைமக் பேலா நிலத்தெபிரோ னிடமா பிரகாரம் வாங்கி வெட்டும்
வசதியான கெபியதனில் வளர்த்தினார்காண் வண்மையினே. (269)
சேமக்கருமஞ் செவ்விதினே தீர்ந்து பிறகு திரும்பினர்க
டாம மார்பன் யோசேப்புந் தந்தை தன்னைச் சேமித்தற்
காமத்துணைவோர் பந்துசன மவனோ டெய்து மனைவோரும்
வாம நீல நதிபாயும் வளர்நா டெகிப்தின் மீளலுற்றார். (270)

யாக்கோபு இறந்தபின் சகோதரர் தியங்கல்.

The Brothers' confusion after the Father's demise.

வேறு:

22. தமதத்த னுயிர்நீவி யிகமேக மனமாழ்கித தனையோர்கடந்
தமனென்ன வுணராது முனஞ்செய்த கடுஞ்செய்கை சமன்செய்துமே
வெமனென்ன வொருவேளை யிகல்செய்வ னெனவஞ்சியிளையோங்க
ணே] கமைவேண்டி யுளாயாட வவண்மாட்டி னொருதூது கடிதேவ
வே. (271)

அவன்வந்து துணைவோர்கண் முனஞ்செய்த நிருமூல வனியாயங்க
ளைவையேனு நினையாது சமியாயென் றிசமாவி யிறுவாமுனந்
தவமோங்கு நின்தைய னினக்காக வறையுஞ்சொ றருமாறிதென்
றிவன்றேவி னடியார்மு னிழைபாவம் பொறுத்தாளென்றிரந்தன
ரோ. (272)

அதுகேட்க யோசேப்பி னிருகண்கள் சொரிந்தேங்கி யழுதிட்டனன்
இதன்பின்னர் துணைவோரு மவன்பானி னடியாரிங் கெழுந்தோமென
இதமாக வொருவன்மின் பரனேயான் வினைசெய்த லெணினீரது
இதமாரு திரியேக வலமாக விழைத்திட்டன் றிடமாமிதே. (273)

புவியோர்கள் வெருவேலா யுயிரோடு புரப்பாறு புரிந்தானதாற்
றவியாம லுனைமேயுஞ் சிசுவோரைப் புரப்பேன்மன் சலியாதருங்
கவையாது மிலையாசப் பயமேவ லீரொன்னக் கனிவோடவன்
அவரோடு பெருமாற றருமாறு சொலிவிட்ட னறிவாளனே. (274)

### வர்த்தனன் மரண முதலியன.

### Death &c. of Joseph.

வேறு:

2. ஆசைதன் குடும்பத் தோடுஞ் சூழ்தந்தை குடும்பத் தோடும்
நேசமா யெகிபயத் தின்கணை யுடைதிருந் திகத்தின் மீது
வாசமாய் நூற்றுப் பத்து வற்சரம் வாழ்ந்தெப் ராயீம்
பேசுசந் ததிமூன் றான பிள்ளைகள் பிறங்கக் கண்டான். (375)

மனசெயின் மகன்மா கீரின் மக்களை மடியிற் கொண்டான்
தனதுசோ தரரைப் பார்த்தென் சாவண்மை யானு முந்தே
முன்னினு பிரகா மீசாக் கியாக்கோபுக் காணை யூண்ட
தெனதுகீழ் நாட்டி னும்மைச் செலுத்துவ னிடமீ தென்றே. (276)

இத்திறந் தேசெய் போதென னன்புகொண் டேகு மென்று
பத்தியி னங்ஙன் செய்தற் கிசைவேற் புத்தி ரர்பால்
வித்தகன் யோசேப் பாங்கு விரதமேற் றுயிர்போ யஃதை
வைத்தனர் பெட்டி யுண்ணல வர்க்கமிட் டெகிப்தின் கண்ணே. (277)

அயனநா னூற்று முப்பா னுகிப்பின் னிஸ்ர வேலர்
வியனுறந் நாடு நீங்கி வேதநா டேகுங் காலைப்
பயனுறு மேனுட் செய்த ஆணையின் படியே மோசே
நயனுறப் பெட்டி தன்னை நாடிக்கொண் டேக லுற்றான். (278)

ஏகியே கானன் றேய மெட்டிய பின்புச் சீகே
மாகிய வூரி லேமோ ரானவன் குமாரர் கையில்
வாகுற யாக்கோப் வாங்கி வழங்கிய நிலத்தி லேயே
மாழ்கிய வென்பை மிக்க வரிசையோ டடக்க லுற்றார். (279)

### வர்த்தனன் மரணத்திற்காக இஸ்ரவேலர் புலம்பல்.

### Lamentation of the Brothers over Joseph's death.

வேறு:

23. மதியேபு ளைந்து வளைநேர் புயத்து வளநா டெகிப்து மகிபாப்
பதியாகிப் பஞ்சத் துயிர வுதித்துப் பலகோடி மாந்தர்ப் புரந்தாய்க்

கதிரீயெ மக்குண் டெனயா மிருக்கக் கடந்தே யிகத்தை விடவே
விதியோர்க்கு வழியெதெமக்கு விடவேமனம்வந் ததுவோ. (280)

முற்காலமியாங்கள் செய்பாதகத்தை முழுதும்மறந்த முதல்வா
பிற்காலமெம்மை யிடர்செய்வையென்று பெரிதேக்கமுற்ற வெமையே
மூக்காலும்பேணி முழுதும் பொறுக்க முதலோனளித்த மலேயே
யெக்காலமுன்னைக் காண்போமுலகி லெவரேபுரப்ப ருனைப்போல. ()

எந்தையிறக்க வினியாருமில்லை யெனவேயிருந்த வெமக்குத்
தந்தையருளைத் தாவிக்கெழுந்தை தந்தாய்மிதந்த தயையே
யிந்தையுனும் மேனையொருநன மேமாவிளங்கி யுறுவாய்ப்
பந்தாகவந்த வனையோர்கள்சுற்றிப் படாக்தேறுதரு வதனையாய். ()

மனையாடனக்குந் தனையோர்தமக்கு மனையோர்தமக்கு மனையாய்
அனையாவெனவுந் துணையோவெனவு மையாவெனவு மழைக்கக்
கனியார்திரட்ச மெனவிங்கிலையன சுழறாமுறையை நிசர்த்தாய்
இனியானாம்பி யுயிரவாழ்வமெந்த மிறையேயுநின் றேவனலதே.(283)

நூற் பயன்.

Morals.

வேறு:

2. இறவெய்து மெண்ணி றந்த வுயிர்க்கொரி ரட்சை செய்யச்
சிறையினி லிருந்தின் னுனைத் தேயத்திற் கரசே யாக்க
விறையவ னியற்றுஞ் செய்கை யினியவாச் சரிய மாகும்
மிறையவ னுள்ள தாகு நிணிலத தோர்கட் கெல்லாம். (284)

தேவனுக் கஞ்சி னுென்றன் சிறுமையா வற்றி னீக்கி
மாவலி தோம்பப் பெற்ற மாண்செய லதனை யோரத்
தேவவாக் கதனின் மிக்க திருட்டாந்த மில்லைக் காண்மோ
தாழ்வினிற் பொறுமை புந்தி தகைமைசா னீதியு ண்மை. (285)

இளமையின மிக்க பக்தி யிணையிலாக் கற்பு வீரந்
தளர்வுறு பெற்றோர் மற்றோர் சகோதரர்க் கன்பு ஞான
மளவின்ற குணங்கள செய்கை யரியமா திரியே யாக
வுளனெவன யோசேப் பல்லா லுலகில்வா லியர்த மககே. (286)

## யோசேப்பு கிறிஸ்துவுக்கோர் குறிப்பு.

## Joseph is a type of Christ.

ஈசனு மியேசு நாத னிலங்குவான் வாசம் விட்டு
வீசுமுப் பதுவெள் ளிக்கே விலையுறீஇச் சிறையுட் பட்டு
மாசுறும் பவத்தா லாண்ட மாணபுவி யோர்கட் கெல்லாம்
பேசமோர் நித்ய ஜீவன் பேணினுன் பெரிது மாதோ. (287)

ஈங்குலா யோசேப் மென்போ னிருபது வெள்ளிக் காக
வாங்குறிப் பன்மூ வாண்டு வன்சிறை வைகி யாண்டே
ழோங்கிய பஞ்சந் தன்னி னுயிர்களை யநேக லக்கந்
தாங்கின னியேசு வுக்கோர் தருங்குறிப் பானு னன்றே. (288)

கோதற வெழுந்த வியேசைக் குவலய மேற்க வில்லைச்
சோதரர் சூசை தன்னைச் சூழ்பகை செய்தார்: மேலாம்
நாதனு மீவர்நம் கேச நந்தன னென்று னியேசைத்
தாதைதன் மகாரின் மிக்கத் தந்தனன் சூசைக் கன்பே. (289)

இயேசுபொய் சாற்றப்பெற்றுர் சூசையு மவ்வா றேற்ருன்:
மாசிலான் மீட்க வந்த மகிதலத் தோரா னிந்தை
பேசுறீ மேலா நாமம் பெற்றுமே வுயர்த்தப் பட்டார்
ஏசுறீஇச் சூசை தானு மெகிப்ததி பதியானு னே. (290)

அண்டர்கோன் றன்செய் யேசுக் ககிலத்தோர் முழந்தா ளூன்றி
யண்டவு மவர்சொற் கேட்டே யடங்கவு மறைக ளுற்ருன்;
மண்டல திபன்பார வோன்ருன் மாந்தர்யா வருஞ்சூ சைக்குத்
தெண்டனிட் டேத்த வென்று திடமுடன் கூறு விததான். (291)

கொடியயூ தர்க ளேற்றுங் குருசினி னுயிர்போம் நேர
மடைமையிற் புரிந்தா ராதால் மன்னியுந் தாதா வென்றே
வடைவுட னிரட்சா மூர்த்தி யன்புடன் வேண்ட லுற்ருன்;
கடைசியிற் றமயர் செய்த கடுந்தொழிற் சமிததான் சூசை: (292)

## ஸ்துதி.

## Thanks to God for enabling to finish the work.

6-கர்த்தனே யிந்நூ லெளிதினின் முடியக்
கருணைபா லித்த ருளென்றேன்

சித்தமா யாங்ஙன் முடிந்திடச் செய்தாய்
திருவடிக்கே நமஸ்காரம்
இத்தனை யிதனை வாசிப்போரெவரு
மிதன் பயனெய்தவு மருள்கூர்
வித்தகமில்லே னெனினுநின் பத்தன்
வேண்டினேன் கருணையங் கடலே. (293)

முற்றிற்று.

Finis.

# யோசேப்பின் சரிதை.

## A GLOSSARY.

## அருஞ்சொல் அருத்தம்.

### தற்சிறப்புப் பாயிரம்

சரிதம் = சரிதை, சரித்திரம்.
ஒருங்கு = ஒழுங்கு, முழுவதும்.
ஆ = ஆக
பாவுதல் = பரம்புதல்
காணிலம் = காணுமென்பது போல முக்காலத்திற்கும் பொதுவான எதிர்மறை வினைமுற்று
அகம் = மனம், வீடு, தானியம்
வழு = குற்றம்
மாண்ட = மாட்சிமையுள்ள
உறைவிடம் = பொருந்துமிடம்
தென்னவன் = பாண்டியராஜன்
தெருளோர் = அறிவுடையோர்
என் = என்கின்ற
நசை = ஆசை
புரக்க = இரட்சிக்க
ஆயனம் = வருஷம்
பா = பாட்டு
அன்றே = அசைச்சொல்

### கடவுள் வணக்கம்.

எடுத்த = தொடங்கின
அடுத்தன = நோக்கிய, குறிப்பிட்ட
பயன் = பிரயோசனம்
நடுத்தன = ஒப்பானவைகள்
நிறையடி = திவ்வியகுணங்கள் நிறைந்த பாதம்
தாழ்கல் = வணங்கல்
பொன்றுமற் பிழைத்துமாறு = சாவாமல் நித்திய ஜீவனை அடையும் வழியாக
துணையில் = ஒப்பில்லாத
தோற்றினவா = காண்பித்தவனே
தந்தாய் = பிதாவே
பாங்கர் = இடம், பக்கம்
ஆர்ந்தவன் = பொலிந்திருந்தவன்
நீத்து = விட்டு
முதலை ஓர = கடவுளையறிய
நிலையில் = பொறிவழி யிறபோக விடாமல் புலன்களை நிறுத்தி
நிமலா = மலம் நீங்கிய சுத்தனே

### அவையடக்கம்.

அவை = சபை
படவியர் = பூமியிலுள்ளோர்
வனைந்தே = உண்டாக்கி
அன்னதிறல் = அப்பண்ணிறல்
ஒன்றும = ஒப்பாயிருக்கும்
ஒருக்காலும் = ஒருதடவையாவது
ஒருகாலும் = ஒற்றைக்காலையாவது
ஒழுக்கா = கிழிவிடாத
நண்ணுதல்போல = தொடுவதுபோல
சாகரம் = சமுத்திரம்
சேர்ப்பு = கரை
வெண்கதிர் = சந்திரன்
விளக்குவன — பிரகாசந்தருவேன்
உரைவல்லோர் — சொல்வல்லோர்
புன்மொழி — எளியஉரை
தரைபதி — பூமிக்கு அரசன்
வணாயாமல் — தள்ளிவிடாமல்

### நாடு, அதன்பெயர், மகத்துவம், விஸ்தாரம், ஊர்கள்.

பாட்டுநாயகன் = பிரபந்தத்திற் குறித்துச் சொல்லப்படுபவன்
ஈட்டல் = சம்பாதித்தல்
காதை = கதை, சரிதம், சரிதை, சரித்திரம்
ஏட்டில் = நூலில்
எய்திடும் = பிறந்திடும்
நவிலல் = சொல்லல்
நண்மகன் = நடுமகன்
காமன் = காமத்தையுடையவன்
காதமுனி = முனிச்சிரேட்டன்
குலவு = கொண்டாடத்தக்க
ஈண்டி = கூட்டமாகி
தலம் = காணுந்தேசம்
தானன = தானுயுண்டான
தரணி = பூமி
வானோர்தேமைந்தன் = வானலோகமுற்ற தேவகுமாரன்
நானாநாடு = பலநாடுகள்
பதின்மர் = பத்துப்பெயர்
புந்தி = புத்தி
உந்தி = வயிறு, உதரம்

### யோசேப்பின் பிறப்பு, வளர்ப்பு, கனு.

சொல்லுசகம் முதலிய = உலக மூண்டாகி 1259-ஆம்
வர்த்தனை = பெருக்கம்
அசம் = ஆடு
வாரம் = அன்பு
ஓரம் = பாரபட்சம்
சும்மை = சுமை
அஞ்சலி = கும்பிடல்
ஆழ்ந்த = வணங்கின
பின்னவன் = தம்பி
வகுத்தார் = சொன்னார்
பேரொளி = சூரியன்
அம்புலி = சந்திரன்
மின்மீனவை = மின்னுகிற நட்சத்திரங்கள்
அன்னபடி = அவ்வாறு
சொல = சந்தேக அசைச்சொல்
ஆறும்வன்னி = ஆறிப்போகின்ற அக்கினி
ஜயனின் = தகப்பனைவிட்டு
இகல் = பகை

### அவன் தமயன்மாரைப்பார்த்து வரப்போனது.

தொலைவிலா = ஏராளமான
தோறறல் = பெருமையிற் சிறந்தோன்
பசியபுற்றடங்கள் = பச்சையான புல்லுள்ள இடங்கள்
தொல்பதிமீள்வார் = தங்களூருக்குத் திரும்புவார்கள்
ஓர்ந்த = தெரிந்த
சேட்டர் = தமயன்மார்

### தமயர் சதியோசனை செய்தது.

காணுமுன்னர் = கண்டவுடன்
எம்பி = எங்கள்தம்பி
கனவாதிக்கன் = கனாக்கண்டவன்
உன்னி = முயன்று
முடுகுங்கள் = சேர்ந்து சீக்கிரம் வாருங்கள்

### நுபன் அவனைத் தப்புவித்துக் குழியிற் போடுவித்தது.

தாதை = தகப்பன்
முன்னி = நினைத்து
புரையில்லானை = குற்றமற்றவனை
அந்தோ = ஐயோ

### அவனைக் கொலைபுரியாது விற்றுப்போட யூதா ஏவினது.

கனிட்டன் = தம்பி
நீட்டினால் = கொடுத்தால்

### இஸ்மவேலருக்கு அவனை விற்றது.

பிறங்கிடும் = பிரகாசம்பொருந்திய
பின்னம் = பங்கு
எழீஇ = எழுந்திருந்து
மற்குமார் = கடினசித்தமுள்ளமக்கள்

### நபன் தம்பியைத் தேடிக் காணாமற்புலம்பல்.

சுதன் = குமாரன்
அத்தம் = நாடு
மத்தர் = பித்தர்
சோதரர் = சகோதரர்
எத்திறம் = எவ்வகை
உழி = இடம்
மெழுகென்ன = மெழுகைப்போல
தலைமகார் = மூத்தமக்கள்
நிலைமை = ஆஸ்தியில்
பின்னரின் = பின் பிறந்தோரைவிட

### தகப்பனுக்குப் பொய்யுரைத்தல்.

கொச்சை = வெள்ளாடு
சோரி = இரத்தம்
தாரி = பாதை
கவசம் = சட்டை
கொல்லுமா = கொல்லுகின்ற விலங்கு or புலி
பொன்றி = இறந்து
இரங்கினான் = அழுதான்

### தகப்பன் புலம்பல்.

ஒண்மணி = பிரகாசமுள்ளரத்தினம்
வேந்து = அரசன்
அடவி = காடு
ஆவென்று = வாய்திறந்து
ஆரணியவிலங்கு = காட்டுமிருகம்
யாவென்று = ஏதென்று
ஆதி = கடவுள்

### சகோதரர் புரிந்த ஆறுபாவம்.

உந்தினர் = வெளிப்பட்டனர்
அந்தம் = அழகு
மக = மகன்
இந்தரை = இவ்வுலகில்
புருவை = ஆட்டுக்குட்டி
வனமா = காட்டுமிருகம்
விருத்தன் = விருத்தாப்பியன்
மூதியன் = கிழவன் (தகப்பன்)
பின்னவன் = பின்பிறந்தோன்
ஒன்னாரினை = சத்துருக்களைப்போல
படுகுழி = விழுந்துகிடக்குங்குழியில்
இறும்படிக்கு = அழியும்படி
தனவிழைவு = பொருளாசை
இகல் = பகை
தாபம் = அவஸ்தை

## போத்திப்பார் வர்த்தனனை வீட்டுவிசாரிப்பில் அமர்த்தினது. அவன் வீடு வர்த்தனை அடைந்தது. அவன் மனைவி இவனை இச்சித்தல்.

வள்ளல் = அரசன்
வித்தகன் = ஞானமுள்ளவன்
ஆதரம் = அன்பு
ஆதரை = நிலம்
ஏந்தல் = பிரசித்தமானவன்
துன்றும் = நெருககும்
எல்லை = காலம்
மன்றல் = கலியாணஞ் செய்து கொண்ட
மன்றம் = மரியாதை
சாதகி = கொலைகாரி
இயம்பிட = சொல்ல
வெகுண்டு = கோபமுண்டு

## வர்த்தனன் சிறையுறல்.

பன்மூவாண்டு = பதின்மூன்று வருடம்
வைகினான் — தங்கினான்
அன்னோற்கு — அவனுக்கு
சொல்லாற் பெயர்த்தனன் — பிரதிபதமெழுதினான
பேணினான் — விரும்பினான்
கருப்பு = பஞ்சம
மாந்தர்கணக்கில் = கணக்கில்லாத ஜனங்களை
கர்த்தனொடு = ஆண்டவனோடு
செவ்வியல் = சிவந்த
செம்மணை = செந்தாமரை
நவ்வி = மான்
இயல்பு = அழகு
தூர்த்தை = வேசி
செவ்விழியாள் = அழகிய விழியுள்ளவள்
புனிதவேதம் — பரிசுத்தவேதம்
இரும்புகழ் — பெரியகீர்த்தி
அன்றே — அசைச்சொல்
ஒருவனால் — கடவுளால்
வணிகர் — வர்த்தகர்
திறலவன — வெற்றியுடையோன்
அகமுடையாள் — மனைவி
செவ்வழி மனத்தோன் = கற்புநெறியிற் பற்றுளோன்
பல்லாறு = பலவிதமாகவும்
செவ்வார் = பகைவர்
சேயிழை = பெண்
முதல்வனை = யஜமானனை
உன்னதம் = வானலோகத்தில்
ஆற்றல் = செயதல்

## பானத்தலைவனும் அப்பத்தலைவனும் அச்சிறையுற்றுக் கனுக் கண்டது, கனவை வர்த்தனன் விளக்கியது, முதலிய.

மானன் = மானமுடையவன்
மகிபன் = அரசன்
கஞ்சுகி = சிறைக்கூடம்
இன்னோன் = இவன
மன்னு = நிலைபெற்ற
ஒல்லவே = பொருந்தவே
சால = தக்கபடி
பயன் = அருத்தம்
பன்னுதல் = வியார்த்திசெய்தல்
கள்ளு = மது
தெள்ளு = தெளிந்த
திறலவன் = வெற்றியுடையோன், அரசன்
வள்ளம் = கிண்ணி
முத்தினம் = மூன்றுதினம்
இறையவன் = அரசன்
துன்னும் = நெருக்கமான

விண்டனன் = சொல்லினன்
அங்ஙனே = அப்படியே
சொற்றனன் = சொன்னான்
மும்மரம் = முக்கோணமரம், தூங்கு மரம்
தோன்றல் = அரசன்
அங்ஙனே = அவ்விடமே
ஆல் = அசைமொழி
ஆன்ற = நிறைந்த
சேவைசெய்வோர் = வேலைக்காரர்
நல்கல் = கொடுத்தல்
துப்புறு = சுத்தமான
கோத்திரி = திராட்சம்
அண்ணல் = இராஜன்
கொண்டேகினர் = கொண்டுபோயினர்
விண்ட = விடுவித்த
மப்பு = மயக்கம்
அரோ = அசைமொழி
தேர்பவற்கு = தெரிந்துகொண்டவனுக்கு
ஊனம் — கெடுதி
ஏனும் = ஆயினும்
ஆமால் = ஆகுமாகையால்
இயல்பு = உண்மை
மாதோ = இடைச்சொல்

## சிறை நீங்குதல்: பார்வோன்கண்ட சொப்பனம், அதன் வியார்த்தி.

வற்சரம் = வருடம்
ஆன்கள் = பசுக்கள்
கதிக்க = கடிக்க
கரும்பின் = கரும்பைப்போல
இரும்புகழ் = பெரியபுகழ்
விழுமை = கொழுமை
கொண்டல் = மேல்காற்று
இத்தகை = இவ்விதமாய்
இறைஞ்சி = வணங்கி
வெய்தின் = கோபத்துடன்
நிருபன் = இராஜன்
புதைத்து = மறைத்து
இயம்பல் = சொல்லல்
வருகும் = வருமகு, சாரியை
கோரம் = அவலட்சணம்
வார்தால் = உடல்
மருங்கில் = பக்கத்தில்
சதைத்து = மென்று
நுங்கின = விழுங்கிவிட்டன
பாங்கர் = பக்கத்தில்
நூங்கு = மேன்மையுள்ள
நுவல்கிலார் = சொல்லமாட்டாதிருக்கிறார்கள்
உறுத்தினன் = வன்மையாய்ச் சொன்னான்
பின்னுறும் = பின்னாகவரும்
வனனுறும் = [illegible]
மன்னுறும் = நிலைபெற்ற
செகனுறும் = அச்சந்தருகின்ற
பெற்றம் = பசு
சுபிடம் — சுபிஷம், மிகுதி
சமை = வருடம்
பிறங்கல் = பிரகாசித்தல்
நண்ணிடும் = உண்டாகும்
மூசிடும் = மூடிக்கொள்ளும்
நுங்கும் = விழுங்கும்

## வர்த்தனன் பஞ்சநிவிர்த்திக் குபாயஞ்சொல்ல அவனைமெச்சி எகிப்துக்கெல்லாம் அதிகாரியாக்கல்.

எய்துமால் = சம்பவிக்குமாகையால்
புந்திவான் = புத்திசாலி
நந்தல் = கேடு
சால = மிகவும்
தேவனைசாரும = தெய்வகடாட்சம் பெற்ற
சாரும் = சம்பவிக்கும்
ஆதனம் = ஆசனம்
அவனி = தேசம்

## வர்த்தனன் தேசஞ்சுற்றிப்பார்த்தல், மகப்பேறு.

இக்கல் — அரசன்
வாசமலிடுத்து — அரண்மனைவிட்டு
சோதி — சோதனை
மண்டேமாறு — மண்டுமாறு, அதிகமாகத்தக்கதாய்
புரிசை — பட்டணங்கள்
வரை — மலை
வரையில்லாமல் — கணக்கில்லாமல்
பயந்தான் — பெற்றான்
எஞ்சல் — குறைவு

## பஞ்சம்: எகிப்தியருக்குத் தானியம் வழங்கல்.

சாருமென்றே — போங்களென்று.
பகர்ந்தான் — விற்றான்.
வாரி — சமுத்திரம்.
வாரி — வெள்ளம்.
வார — மனுஷரை வாரிக்கொண்டு போனதினால்
வாரி — தானியம்
வள்ளல்பிரதிபால் — அரசனுக்குப் பதிலானவனிடம்

## யாகோபின் புத்திரர் தானியத்துக்காக முதல் விசை எகிப்திற்கேகினது.

கொள்கை — கொள்கையில்.
வானா — விண்ணிலே.
ஊனுயிர் — சரீரமுமுயிரும், ஊன்பொருந்தவுயிர்
இன்னல் — பொல்லாங்கு
தாரி, நெறி — வழி
உவக்கலர — விரும்பவில்லை
பதின்மர் — பத்துப்பேரும்
அவ்வூர் — அந்த ஊர்
நிகழ்ந்தது — நடந்தேறுவதை
துணிக்கும் — நிச்சயமாயிருக்கும்
இசைய — உரைத்து
ஊர்ந்தோம் — வந்தோம்
மாசிலேமென — யாம் குற்றமற்றவர்களென்று சொல்லியும்
மன்னன் — இராஜன்
ஒற்றரா — வேவுகாரராக
ஈண்டு — இவ்விடம்
முடுகினீர் — வந்தீர்
என்று — என்று சொல்ல
வாசம் — வீட்டைக்
பார்த்திபப்பிரதி — அரசனுக்குப்பதிலானவன்
சேடன் — தம்பி
அகல்கிலீர் — போகமாட்டீர்
காண்குவல் — அறிவேன்
கனன்று — கோபித்து
ஆன்றநாள் — மூன்றும்நாள் நிறைவேறி
ஏன்ற — லபித்த
ஏனையோர் — மற்றவர்கள்
சான்ற — மேன்மையுள்ள
சாருமின் — போங்கள்
துவிபாஷிகர் — இரண்டு பாஷைதெரிந்தவர்
அறைவார் — சொல்லுவார்
இளவல் — தம்பி
முன்னோர் — தமையன்மார்
பிணிக்க — கட்ட
இவறல் — ஆசை
கொணர் — கொண்டுவந்த
கவையின் — கருத்துடன்
கவிப்பவும் — கொட்டவும்
அன்னர் — அவர்கள்
கத்தை — கழுதை
கொளீஇ — கொண்டு

## யாக்கோபின் புத்திரர் தகப்பனைச் சந்தித்தது.

தெற்ற—விரைவில்
கவின்—அழகு
திறல்—வலிமை
அமுசன்—தம்பி
ஏத்தல்—துதித்தல்
மாற்றம்—மாறுத்தரம்
அருடி—அருள்வாய்
வின்னம்—பொல்லாங்கு

## அவர்கள் தானியத்திற்காக 2-ம் விசை எகிப்திற்கேகினது.

மகளை—மக்களை
கூய்—கூப்பிட்டு
அகம்—தானியம்
வம்மின்—வாருங்கள்
ஓசை—கீர்த்திபெற்ற
ஏசு—குற்றம்
அறைந்தனனால் -சொன்னானாகையால்
இன்னா—பொல்லாங்கு
செய்வல்—செய்வேன்
கோம்—குற்றம்
சமயம்—தாமதம்
அத்தன்—தகப்பன்
அங்ஙனமேல்—அப்படியானால்
மிதம்—அளவு
பதம்—பாதம்
உறீஇ — உற்றவர்களாய், எடுத்துக் கொண்டு
படர்மின்—போங்கள்

## இரண்டாம்விசை திரும்பிப்போய் வர்த்தனனைக் கண்டது.

கையார—கையிலுள்ளவர்களாய்
தப்பிறம்பி—தப்பில்லாத தம்பி
எழிற்புலவு—நல்லமாமிசம்
அடிசில்—சமையல்
நண்பகல்—நடுப்பகல்
மடையர்—சமையற்காரர்
மாடமுய்ப்பான்—மண்டபத்திற்சேர்க்கும்படி
படர்—குற்றம்
செயூ—செய்து
காங்கள்—கழுதைகள்
கொல்—ஐயக்கிளவி
ஏற்குமா—வாங்கும்படி
போயினோம்—போனோம்
ஆற்றினே—வழியிலே
இது காறும்—இன்றுவரை
அறிந்திலம்—அறிந்தோமில்லை
ஈடு—அதற்குப் பதிற் பணம்
இன்னே—இப்போது
அன்றே—அசைச்சொல்
வெருவன்மின் —பயப்படாதிருங்கள்
அவண்—அவ்விடம்
செய்தி யுறீஇ—செய்தியைக்கேள்விப்பட்டு
தாமபுயன்—மணிவடம் பூண்ட மார்பன்
தொழீஇ—தொழுது
எனா, என்னா, என,—என்று சொல்லி, என்றுசொல்ல
காறேயுநீர்—கால்கழுவ நீர்
கத்தை—கழுதை
வாமம்—அழகு
அளவை—வயது
தவன்—தவம் புரிவோன்
சால—மிகவும்
வளனே— வன்மைபொருந்திய வனே

## வர்த்தனன் சகோதரருடன் அசனஞ் செய்தல்.

ஆனனம்—முகம்
விளக்கி—சுத்திசெய்துகொண்டு
போந்து வெளி—வெளியிற்போய்
வேண்டல்—விருப்பம்
ஆதல்—ஆகையால்
தக்கவன்—தகைமையுள்ளோன்; இங்கே வர்த்தனன்

தோக்கும்—மற்ற
தொக்கார்—பந்தியமர்ந் திருந்தார்
ஆசு—குற்றம்
பிறங்க—வெளிப்படத்தக்கதாய்
உணவை—உணவுப் பதார்த்தங்களை
ஏய்ந்த—வாய்த்த
மது—திராட்சரசம்

## பென்யமீன் சாக்கில் வெள்ளிக்கிண்ணி இருந்தது.

பின்னை—பின்பு
சொல்லா—சொல்லி
மினும்—மின்னும்
துனைவின்—விரைவாக
உரைத்தாங்கு—சொன்னபடி
பணி—வேலையாள்
முன்னர்—முன்னே
நம்பி—ஆணிற் சிறந்தோன்
நண்பர்கள்—தோழர்கள்

காண்டி—கண்டாய்
கரவிலாது—மறைக்காமல்
ஆண்டை—யஜமானனுடைய
படர்மாட்டு—எவனிடத்தில்
விரதம்—தவம்புரிகின்ற
அறையாக—மொழிந்தபடியாக
காவலன்—அரசன்
இருத்தார்—இறங்கினார்கள்

## யூதா பென்யமீனுக்காக வர்த்தனனை வேண்டல்.

யூகன்—விவேகன். இங்கே வர்த்தனன்
பூவின்மிசை—பூமியின் மேல்
புரிந்தது—செய்தது
தோதகமிலாது — வஞ்சகமில்லையென்று
எங்ஙன்—எப்படி
தோம்—குற்றத்தை
தே—கடவுள்
தோற்றினன்—வெளிப்படச் செய்தான்
துணைவர்—சகோதரர்
செம்மல்—பெருமையிற்சிறந்தோன்
உத்தணகை—தட்டணிடம்
மிடைந்திருப்பது—கலந்திருப்பது
பாதலம்—பாதாளம்
ஆக—ஆனபடியால்

நண்ணற்க கோபம் — கோபங்கொள்ளாதிருக்கக் கடவாய்
இறைவ—ஆண்டவனே
தோன்றலுண்டோ — மக்களுண்டோ
பெட்பு—பிரியம்
அற்றுவீழ்வன்—இறந்துபோவான்
வதனம்—முகம்
மாற்றம்—சம்பாஷணை
சொற்றேம்—சொன்னோம்
விருத்த—விருத்தாப்பியமான
மால்—அழகிய
இடும்பை—துன்பம்
இழைத்திட்ட—செய்த
மன்னினர்—மிகுந்துள்ளார்
துளக்கினேன்—கலக்கினேன்
அயர்தல்—மனவருத்தமடைதல்

### யாக்கோபு அரசனைக் காணல்.

சிதம்—ஞானம்
மேய—மேவிய
இரும்—பெரிய
களைகண்ணுய்—தாபரமாய்

### பஞ்சம்.

எய்த்து—குறைந்து
இலையாக—இல்லாமற்போக
விஞ்ச—மிகுதியாக
அத்தம்—அருத்தம், பொன், பணம்
நும்மாட்டு—உங்களிடத்தில
தம்மான்—தங்கள்பிரபு
எம்மான்—எம்பிரபு
இவ்வீண்டு—இவ்விடத்தே
செவ்வரண்டையர்—செம்மையா
னகுடிகள்
பழனம்—வயனிலங்கள்
கோன—அரசன
வாழ்வாங்கு—வாழும்பிரகாரம்
நல்குதல்—ஈதல்
அடக்கலே—புதைக்காமல்
பூசனை—பூசித்தலுடைய
நாசனம்—அழிவு
அங்கம்—கட்டில்

### தந்தை சாவுக்குச் சமீபமானதாய் வர்த்தனனுக் கறிவித்தல்.

சுதர்—குமாரர்
அன்றே—அசை
நீடினன்—வந்தான்
நெடியோன்—பெரியவன்
இசைதரல்—பேசல்
மனக்குவந்திடும்—மனதுக்குவந்த
ஏய்வார்—போன்றிருப்பார்
பதவை—வழி
விதானி—பாக்கியவதி

### யாக்கோபு வர்த்தனன் குமாரரை ஆசீர்வதித்தல்.

எழும்—வாலான்
மீசொால—மேலேவர
ஆசி—ஆசீர்வாதம்
வாாத்தகன்—விருத்தாபியன்
தாத்திரி—பூமியிலுள்ள
சீர்குலாம்—செல்வமபொருந்திய
காண்பல்—காண்பேன்
பின்றலைமீ—இளையவன்றலைமேல்
பேணி—வைத்து
பிதிர்—பிதாக்களான
ஈன்றோர்—தந்தைகளான
தானவன்—இடத்துச் சிறந்தோன்
இங்கேயாககோபு

### வர்த்தனனுக்கு அதிக சுதந்தரம் கிடைத்தல்.

ஆவி—உயிர்
ஆக்கை—தேகம்
காளை—குமாரர்

### யாக்கோபு குமாரருக்குக் கடைசிவாக்களித்தது.

விளித்து—கூப்பிட்டு
மீக்கொளும்—மேலேசொல்லும்
இர்ந்திட—இமேழவிழ
புயங்கம்—பாம்பு

கதம்—கோபம்
உறையா—இருக்கின்ற
கிழவரி—கிழச்சிங்கம்
தாலம்—உலகம்
அமுது—பால்
சான்றிடும்—பிரகாசிக்கும்
ஏண்—வலிமை
சேணுறும்—தூரமான
இகடரா—இமழ்தரா, பிரகாசமற்ற
பாத்தல்—பகிர்தல்
பாருவான்—விற்பான்
பிணை—பெண்மான்
தேசு—பலம்
ஆசிடை, ஆசி—ஆசீர்வாதம்

## யாக்கோபு தன்னைச் சேமிக்க வகை சொல்லல்.

ஞாலம்—பூமி
அம்பொன்—சரிவிலை
ஈட்டினது—சம்பாதித்தது

## யாக்கோபின் மரணத்தின் பேரிற் புலம்பல்

துறந்தாய்—நீங்கினாய்
வாழ்வான்—வாழும்படி
வையம் வையகம்—பூமி
மகம்—இன்பம்
முன்னோன்—கடவுள்
கொன்—பயங்கரம்

## யாக்கோபின் உடலைக் கானானிற் கொண்டுபோய்ச் சேமிக்க வர்த்தனன்விடைபெறல், போய்ச் சேமித்தல்.

ஆரியர்—வைத்தியரை
அகந்தனின்—உடற்குள்
இமிர்ந்தே—செலுத்தி
கன்னல்—கரும்பு
நந்தி—பெருக்கமாய்
அயர்ந்தார்—கொண்டாடினார்.
இசை—பேர்போன.
காண்—இடைச்சொல்.
ஆம்—ஆகும், உதவிய

## யாக்கோபுக்குப்பின் சகோதரர் தியங்கல்.

மனமாழ்கி—மனத்துயரடைந்து
தமன்—தம்மவன்
எமனென்ன—யமனைப்போல்
இகல்—பகை
கமை—மன்னிப்பு
அரோ—அசைச்சொல்
இழைத்தல்—செய்தல்
புரப்பாறு—இரட்சிக்கும்படி
மன்—மிகவும்

## வர்த்தனன் மரண முதலியன.

தனுது—தனது
என்பு—எலும்பு, சடலம்
ஆணைமூலமா—ஆணைசெய்து கொடுக்கப்பட்ட
விரதம்—ஆணை
அயனம்—வருடம்
வியன்—மேன்மைபெற்ற
வேதநாடு—கானான்தேசம்
நயன்—நயம்
மாழ்கிய—உருக்குலைந்த
என்பை—உடலை

## வர்த்தனன் மரணத்திற்காகச் சகோதரர் புலம்பல்.

வரை—மலை
முதல்வன்—தலைமையானவன்
முக்காலமு—திரிகாலமும்
முதலோன்—கடவுள்
எவரோ—யாரோ
நாமமேனா—பெயரின் பிரகாரம்
மோராய்—மலையாய்
பந்து—பந்து ஜனங்கள்
இணையாய்—ஒப்பானவனே
இணையாய்—தாயாயிருந்தவனே
கழறும—சொல்லிய
இறையே—அரசே

## நூற்பயன் முதலிய.

இறவெய்தும்—பசியினால் வருந்திச் சாகின்ற
நீணிலம—நீண்டவுலகம், பெரியஉலகம்
ஓம்பல்—காப்பாற்றல்
கற்புவீரம்—கற்பாகிய வீரம்
மாதேய—ஆசைச்சொல்
நந்தனன்—குமாரன்
மகிதலம்—உலகம
தோஷம—குற்றம
குவலயம—உலகத்தார்
அகிலம்—உலகம்
வித்தகம்—ஞானம்

முற்றிற்று.

## யாப்பிலக்கணச் சுருக்கம்.

## Succinct Chapter of Prosody.

1. யாப்பாவது நால்வகைச்சொற்களாலும் பலதிசைச்சொற்களாலும் பொருளமையப் பாடுவது. இதற்கு உறுப்புகள் எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை, இவ்வாறுமாம்.

2. எழுத்து—தொல்காப்பிய முதலியவைகளிற் சொல்லப்பட்ட முதலெழுத்தும் சார்பெழுத்துமாம்.

3. அசை—அவ்வெழுத்தால் ஆக்கப்பட்டுச் சீருக்கு உறுப்பாய் வருவதாம். அது நேரசை, நிரையசை என இருவகைப்படும்.

(a) அவற்றுள் நேரசையாவது ஒரு குறில் தனித்தாயினும் ஒற்றடுத்தாயினும் ஒரு நெடில் தனித்தாயினும் ஒற்றடுத்தாயினும் வருகின்ற நால்வகையாம். உதாரணம்,

க—குறில் தனியே வந்த நேர்; கல்—குறில் ஒற்றடுத்து வந்த நேர்.

கா—நெடில் தனியேவந்த நேர்; கால்—நெடில் ஒற்றடுத்துவந்தநேர்.

(b) நிரை அசையாவது குறிலிணையாயினும் குறில் நெடிலாயினும் தனித்தேனும் ஒற்றடுத்தேனும் வருகின்ற நால்வகையாம். உ—ம்.

கட—குறில் இணைந்து வந்தநிரை. கடா—குறில்நெடிலிணைந்து வந்த நிரை.

கடம்—குறிலிணைந்தொற்றடுத்தநிரை. கடாம்—குறினெடிலிணைந்தொற்றடுத்தநிரை.

4. சீர், சீராவது மேற்கூறிய அசைகள் சிறுபான்மை தனித்தும் பெரும்பான்மை இரண்டுமுதலாகத்தொடர்ந்தும் வருவது. அது அசைச்சீர், இயற்சீர், உரிச்சீர், பொதுச்சீர் என நால்வகைப்படும்.

(a) அசைச்சீர் இரண்டு. இதற்கு உதாரணவாய்ப்பாடு நேர், நாள், நிரை, மலர்.

(b) இயற்சீராவது நேர் நேர், நிரை நேர், நிரை நிரை, நேர் நிரை, என்னும் ஈரசையாலாகிய நான்குமாம்.

இவற்றிற்கு உதாரணவாய்ப்பாடு.

நேர் நேர்—தேமா<br>நிரை நேர்—புளிமா } இவை மாச்சீர்.

நிரை நிரை—கருவிளம்<br>நேர் நிரை—கூவிளம் } இவை விளச்சீர்.

இவை அகவலுக்கே யுரியவாய் இயற்சீர் எனவும், அகவற் சீரெனவும் ஆசிரிய உரிச்சீரெனவும் பெயர்பெறும்.

(c) உரிச்சீர் மூவசைச்சீராய் நேரீற்றுச் சீர் நிரையீற்றுச் சீர் என இருவகையாய் இருநான்காம். இவற்றுள் நேரீற்றுச்சீர் நான்கும் வெண்பாவிற்குரியவாய் வெண்சீர் எனப்படும். நிரையீற்றுச் சீர்நான்கும் வஞ்சிப்பாவிற்குரியவாய் வஞ்சிச் சீர் எனப்படும் நேரீற்றுச்சீர்க்கு உதாரணவாய்ப்பாடு:—

| | |
|---|---|
| நேர் நேர் நேர்—தேமாங்காய் | இவைகாய்ச்சீர் |
| நிரை நேர் நேர்—புளிமாங்காய் | |
| நிரை நிரை நேர்—கருவிளங்காய் | |
| நேர் நிரை நேர்—கூவிளங்காய் | |

நிரையீற்றுச் சீர்க்கு உதாரணவாய்பாடு:—

| | |
|---|---|
| நேர் நேர் நிரை—தேமாங்கனி | இவைகனிச்சீர். |
| நிரை நேர் நிரை—புளிமாங்கனி | |
| நிரை நிரை நிரை—கருவிளங்கனி | |
| நேர் நிரை நிரை—கூவிளங்கனி | |

(*d*) பொதுச்சீராவது, இயற்சீர் நான்கனோடும் தண்ணிழல், தண்பூ, நறுநிழல், நறும்பூ என்னும் நான்கனையும் உறழவரும் நாலசைச்சீர் பதினாறுமாம்.

5. தளை.—தளையாவது, நின்றசீரின் ஈற்றசையும் வருஞ்சீரின் முதலசையும் ஒன்றியேனும் ஒன்றாதேனும் தளையப்பட்டு நிற்பது [ஒன்றுதலாவது நேர்முன் நேரும், நிரைமுன் நிரையும் நிற்பது; ஒன்றாமையாவது நேர்முன் நிரையும், நிரைமுன் நேரும் நிற்பது.] அது (1) நேரொன்றாசிரியத்தளை (2) நிரையொன்றாசிரியத்தளை, (3) இயற்சீர்வெண்டளை, (4) வெண்சீர் வெண்டளை, (5) கலித்தளை, (6) ஒன்றியவஞ்சித்தளை, (7) ஒன்றாத வஞ்சித்தளை, என எழுவகைப்படும்.

(1) இயற்சீர்வந்து நின்றசீர் ஈற்றசையும் வருஞ்சீர் முதலசையும் ஒன்றிவரின் ஆசிரியத்தளையாம். தேமாபுளிமாவந்து தேமாவுங் கூவிளமும் வரப்பெறின் நேர்நேரோடொன்றியவதனால் நேரொன் றாசிரியத்தளையாம்.

(2) கருவிளமும் கூவிளமும் வந்து கருவிளமும் புளிமாவும் வரப்பெறின் நிரைநிரையோடொன்றிய வதனால் நிரையொன்றாசிரியத்தளையாம்.

(3) இயற்சீர்வந்து நின்ற சீரிறுதியும் வருஞ்சீர் முதலும் ஒன்றாது நேர்முன் நிரையும் நிரைமுன்நேரும் வரப்பெறின் இயற்சீர்வெண்டளையாம்.

(4) காயீற்ற வெண்சீர்வந்து நின்ற சீரீற்றசையும் வருஞ்சீர் முதலசையும் ஒன்றிநேர்முன் நேர்வரப்பெறின் தன்றளையாகிய வெண்சீர் வெண்டளையாம. [ஆகையின வெண்டளையுமிருவகைத்தே இவ்விருவகைக்கும் பொதுவிதியாக மாமுன் நிரையும் விளமுன்நேரும், காய்முன் நேரும்வருவது வெண்டளை யெனக்கொள்க.

[அன்றியும் வெண்பா முதலியவற்றிற்கு எழுத்தெண்ணி அசைபிரித்துச் சீர்சிக்கறுத்துத் தளை நோக்குங்கலையிற் சிற்சிலவிடத்துச் சீருந்தளையுஞ் சிதைந்து வருமாயின குற்றியலிகரம் குற்றியலுகரம் உயிரளபெடை இவை அலகுபெறா எனவும, ஐகாரகுறுக்கமும் ஒற்றளபெடையும் ஒவ்வொரு மாத்திரையாக அலகிடப்பெறுமெனவுங்கொள்க.]

(5) வெண்சீர்வாது நின்றசீரீற்றசையும் வருஞ்சீர் முதலசையுமொன்றுது காயாகிய நேர்முன் நிரைவரப்பெறின் கலித்தளையாம்.

(6) கனியீற்றவுரிச்சீர்வந்து நின்றசீரீற்றசையும் வருஞ்சீர் முதலசையுமொன்றி நிரைமுன் நிரையே வரப்பெறின் ஒன்றியவஞ்சித்தளையாம்.

(7) அவ்விரண்டுமொன்றுது நிரைமுன் நேர்வரின் ஒன்றுதவஞ்சித்தளையாம்; ஆகையால் வஞ்சித்தளையு மிருவகைத்தாம.

6. அடி—அடியாவது, மேற்கூறிய தளைகள் ஒன்றும் பலவும் அடுத்து வருவது. அது ஐந்து வகையாம்.

குறளடி—இருசீரான் வருவது.

சிந்தடி—முச்சீரான் வருவது.

அளவடி—நாற்சீரான் வருவது.

நெடிலடி—ஐஞ்சீரான் வருவது.

கழிநெடிலடி—ஐஞ்சீரின் மிக்க சீரான் வருவது.

7. தொடை—தொடையாவது, மேற்கூறிய பலவகையடிகள் ஒன்றிவரத்தொடுப்பது. அது (1) மோனைத்தொடை, (2) இயைபுத்தொடை (3) எதுகைத்தொடை, (4) முரண்டொடை, (5) அளபுத்தொடை என ஐவகைப்படும்.

(1) முதலெழுத்தொன்றி வரத் தொடுப்பது. } மோனைத்தொடை.

| | |
|---|---|
| (2) ஈற்றெழுத்தொன்றி வரத் தொடுப்பது. | இயைபுத்தொடை. |
| (3) இரண்டாமெழுத்தொன்றி வரத் தொடுப்பது. | எதுகைத்தொடை. |
| (4) மொழியானும் பொருளானும் மறுதலைப்படத்தொடுப்பது. | முரண்டொடை. |
| (5) உயிரளபெடையும் ஒற்றளபெடையும் ஒன்றிவரத்தொடுப்பது. | அளபுத்தொடை. |

அடிமுதற்கண்ணே வந்த முதலுயிரெழுத்தும் உயிர்மெய்யெழுத்தும் மீண்டும் வரத்தொடுப்பது மோனையாம். அவ்வவ்வெழுத்து தானே வரினும் அவற்றவற்றின வெழுத்து வரினு மிழுக்கா மோனையாவதற் கெழுத்தின மாவன:—

| | |
|---|---|
| அ—ஆ—ஐ—ஔ இந்நான்கும் | ஒன்றற் கொன்று மோனையாம்; இவை உயிரெழுத்தினம். |
| இ—ஈ—எ—ஏ இந்நான்கும் | |
| உ—ஊ—ஒ—ஓ இந்நான்கும் | |

| | |
|---|---|
| ச—த இவ்விரண்டும் | ஒன்றற்கொன்று மோனையாம்; இ உயிர்மெய்யெழுத்தினம். |
| ஞ—ந இவ்விரண்டும் | |
| ம—வ இவ்விரண்டும் | |

அடிதோறும் இரண்டாமெழுத்தொன்றி வருவது எதுகையெனப்படும்; முதலெழுத்துத்தானே வராவிடினும் முதலெழுத்தெல்லாஞ் சமமுள மாத்திரை யளவோடொத்தன வாதல்வேண்டும், ஆகையால் கட்டெனபதற்குப் பட்டென்பதெதுகையாவதல்லாது பாட்டென்பதகாது.

8. பா.—அத்தொடைகள் பாவி நடத்தலாலாகிய பா வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என நால்வகைப்படும். இப்பா ஒவ்வொன்றிற்கும் துறை, தாழிசை, விருத்தம் என இனங்கள் மூன்றுண்டு இவற்றுள்.

வெண்பா.

9. வெண்பாவாவது ஈற்றடி சிந்தடியாய் ஏனையடி அளவடியாய், வெண்சீரும் இயற் சீரும்வந்து வெண்டளை பிறழாது வேற்றுத்தளைவிரவாது காசு, பிறப்பு, நாள், மலர் எனனும வாய்பாட்டுள் ஒன்றுன் முடிவது.

அவ்வெண்பா குறள்வெண்பா, நேரிசைவெண்பா, இன்னிசைவெண்பா, சிந்தியல்வெண்பா, பஃறொடைவெண்பா என ஐந்து வகைப்படும் அவற்றுள்,

10. குறள் வெண்பாவாவது, இரண்டடியாய் ஒரு விகற்பத்தாலேனும் இருவிகற்பத்தாலேனும் வருவதாம்.

புளி மா புளி மா புளி மாங்காய் தே மா
நிரை நேர் நிரை நேர் நிரை நேர் நேர் நேர் நேர்
அக ர முத ல வெழுத் தெல் லா மா தி
புளி மா புளி மா புளி மா
நிரை நேர் நிரை நேர் நிரை நேர்
பக வன் முதற் றே யுல கு

[இது ஈற்றடி சிந்தடியாய் ஏனைய அளவடியாய் இயற்சீரும் வெண்சீரும் விரவி வெண்டளை பிறழாது பிறப்பு என்னும் வாய்பாட்டான் முடிந்த ஒரு விகற்பக்குறள் வெண்பா.]

மனத் துக் கண் மா சில னா த லனைத் தற
னா குல நீ ர பிற.

[இது மலர் என்னும் வாய்பாட்டான் முடிந்த இருவிகற்பக்குறள் வெண்பா.]

11. நேரிசைவெண்பாவாவது, இரண்டுகுறள் வெண்பாவாய் நடுவே முதற்குறளின் எதுகைக்கு ஏற்றதனிச்சொல்லால் இரண்டாமடி நிரம்பி, நான்கடியும் ஒரு விகற்பமாகவாயினும், அன்றி முன்னிரண்டடியும் ஒரு விகற்பமாகவும், பின்னிரண்டடியும் மொருவிகற்பமாகவுமாயினும் வருவது. முதற்குறளின் இறுதியும் தனிச்சொல்லும் விட்டிசைத்து நிற்பின், ஒற்றுமைப்படாத உலோகங்களை ஒற்றுமைப்படப் பற்றுசிட்டுக் கூட்டுவதுபோல, அவற்றினிடையே ஓரசையாயினும் ஈரசையாயினும் சேர்த்துக் கூட்டப்படும் இவ்வாறுவருவதை ஆசிடையிட்ட நேரிசைவெண்பா என்பர்.

12. இன்னிசைவெண்பாவாவது, தனிச்சொல்லின்றி நான்கடியாய் ஒரு விகற்பத்தாலேனும் பல விகற்பததாலேனும் வருவது. இரண்டாமடியினிறுதியில் தனிச்சொல் பெற்றும் மூன்று விகற்பத்தான்வரின் அதுவும் இன்னிசை வெண்பாவேயாம், மூன்றாமடியினிறுதியில் தனிச்சொல்பெற்று இருவிகற்பத்தான் வருவதுமது.

## ஆசிரியப்பா.

13. ஆசிரியப்பாவாவது தனக்குரிய இயற்சீரின்றிக் கருவிளங்கனி, கூவிளங்கனி என்னும் நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீர் நீக்கலாக மற்றச் சீர்க

ளோடுங் கலந்தும் தன்றளையன்றி வெண்டளை, கலித்தளை வஞ்சித்தளைக ளோடு மயங்கியும வந்து, அகவலோசையைப் பெறுவதாம்.

கலிப்பா.

14. கலிப்பாவாவது தேமா, புளிமா, கருவிளங்கனி, கூவிளங்கனி என் னும் நான்கு சீருமொழிய மற்றச்சீர்களோடுகலந்தும், தனறளையன்றி வெ ண்டளை, ஆசிரியத்தளை, வஞ்சிததளைகளோடு மயங்கியும் வந்து, துள்ளலோ சையைப்பெறுவதாம்.

வஞ்சிப்பா.

15. வஞ்சிப்பாவாவது தனக்குரிய சீரும் தளையுமன்றிப் பிறசீருந்த ளையும் தழுவிக, குறளடியாலுஞ் சிந்தடியாலும் மூன்றடிமுதல் பலவடியா கித், தனிச்சொல்லும் ஆசிரியச் சுரிதகமும் பெற்றுத், தூங்கலோசையுடை த்தாய் வருவதாம்.

பாவினம்.

மேற்கூறிய பாக்களுக்கு இனமெனறு சொல்லிய துறை, தாழிசை, வி ருத்தங்களுள, துறை வெண்டுறை, ஆசிரியத்துறை, கலிததுறை, வஞ்சித் து றை, என நான்கு வகைப்படும அவற்றுள்.—

16. கலித்துறையாவது கலிப்பாவினமாக வருந்துறையாம் அதுவே ஐந்துசீராகிய, நெடிலடி நாலும் ஒரொ துகையாக வரும்.

17. தாழிசை வெண்டாழிசை, ஆசிரியத்தாழிசை, கலித்தாழிசை, வஞ்சித்தாழிசை என் நான்கு வகையாம்.

18. விருததம வெளிவிருத்தம், ஆசிரியவிருத்தம், கலிவிருத்தம், வ ஞ்சி விருத்தம என நான்கு வகைப்படும.

19. ஆசிரிய விருத்தமாவது ஆசிரியப்பாவினினமாகக், கழிநெடிலடி யாகி ஒரொதுகையாக வருவதாம்.

20. கலிவிருத்தமாவது கலிப்பாவினினமாக அளவடியொத்து நான்க டியாகி ஒரொதுகையாக வருவதாம்.

21. சந்த விருத்தமாவது குழிப்புஞ் சந்தமும்பற்றி எழுத்துவகை யாலும் அசைவகையாலும வருவதாம்.

முற்றிற்று.

## An Index to the formula of the metrical syllables used in the 23 kinds of verses in the book.

இந்தப் புராணத்தில் வழங்கிய 23 விதக்கவிகளைச் சார்ந்த நேரசை நிரையசைகளைக்காட்டும் வாய்ப்பாட்டுகுறிப்பட்டவணை.

1. நேரிசை யாசிரியப்பா. இதில் ஈற்றயலடி முச்சீராய் மூன்றுவது சீர்பெரும்பாலும் உரிச்சீராகவரும் மற்றைச்சீர்களெல்லாம் தேமா, புளிமா, கருவிளம் கூவிளம் எனகிற நான்கு இயற் சீர்களும் மாறி மாறி வருகின்ற வையாம்.

2 அறு சீர்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.
—விளம்,—மா, தேமா,—விளம்,—மா, தேமா.

3. எண் சீர்க்கழி நெடிலடி ஆசி. விருத்தம்
— —காய்,— —காய்,—மா, தேமா இதை இரட்டிக்க எண்சீரும்வரும்.

4. அறுசீர்க்கழிநெடிலடி ஆசி. விருத்தம்
— —காய்,— —காய்,— —காய்,— —காய்,—மா, தேமா.

5. நார் சீர்க்கலி விருத்தம்.
—மா, கூவிளம், கூவிளம், கூவிளம்.

6. எழுசீர்க்கழிநெடிலடி ஆசி. விருத்தம்
—விளம்,—மா,—விளம்,—மா,—விளம்,—விளம்,—மா.

7. நாற்சீர்க்கலி விருத்தம்
—விளம்,—விளம்,—மா,—விளம்.

8. நாற்சீர் வஞ்சி விருத்தம்.
—மாங்கனி, கூவிளம், கூவிளம், கூவிளங்காய்.

9. நாற்சீர்க்கலி விருத்தம்
கூவிளங்காய், கூவிளங்காய், கூவிளங்காய், தேமா.

10. தரவுக்கொச்சகக்கலிப்பா. இது தே மாங்காய், புளிமாங்காய், கருவிளங்காய், கூவிளங்காய், என்கிற நான்கு வெண்சீரும் தேமா, புளிமா கருவிளம், கூவிளம், என்கிற நான்கு இயற்சீரும் விரவி வெண்டளைபெற்று வருவது.

11. எழுசீர்க்கழி நெடிலடி ஆசி. விருத்தம்.
—மா, கூவிளம், தேமா, கூவிளம், தேமா, கூவிளம், கூவிளம்.

